# Contents

நான் ” மற்றும் என்னுடை ” எண்ணம்”

இப்படிச் சொன்னால் ‘எனக்கு புரியும் என்று நான் நினைக்கிறேன்’......

அதாவது” நான்” உயிருடன் இருக்கும் போது ‘ என்னை நானே’ கொண்டாடிக் கொண்டு இருப்பது இல்லை.

அப்படி ஆனால் ” நான் ” இப்போது இறந்து பின் ஆவியாக பேசுகிறனா? நான் ஒன்றும் ” P T சாமி” ( பிசாசு கதை எழுத்தாளர்) இல்லை.

இப்போதே விஷயத்துக்கு வருகிறேன்.

எவ்வளவுக்கு, எவ்வளவு நான் என்னை சுயநலமாக எண்ணி என்னைப் புரிந்து கொண்டு செயல்படுகிறேனோ !! அவ்வளவுக்கு, அவ்வளவு நான் பிறரைப் பற்றிய புரிதல் மற்றும் சமூக அக்கறை ஆகியவற்றில் தெளிந்து , சிந்தனையுடன் செயல்பட்டு ஒரு பொறுப்பு உள்ள குடி மகனாக வாழ பழகிக் கொள்ள முடியும்.

அதற்கு முதற்படி நம் பெற்றோரைப் பற்றிய ஒரு புரிதல் வேண்டும்.

அவர்களைப் பற்றி அதிகம் குறை கூறாமல் , நாம் பிறக்க ஒரு கருவியாக இருந்து நம்மை வாழ வைப்பதற்காக ஒரு நன்றியை எப்போதும் செலுத்திக் கொண்டு இருக்க வேண்டும்.

நாம் வாழ வழி தெரியாமல் நிலையற்று இருக்கிறோம் என்று வைத்துக் கொள்வோம்.

இப்போது என்ன செய்வது என்கிற சிந்தனை வரும்.

அதற்கு இரண்டாம் படி :- நம்மை பிறரிடம் இருந்து பிரித்துப் பார்க்க பழகிக் கொள்ள வேண்டும்.

பிறருடைய எண்ணங்கள், செயல்கள் நம்மை நாமே பாதிக்காத அளவுக்கு நம்மை நாமே பாதுகாக்க பழகிக் கொள்ள வேண்டும்.

எப்படி?

1. நல்ல உணவினாலா?

2. நல்ல உடையினாலா ?

3. நல்ல படிப்பினாலா?

4. அதிக நண்பர்கள் சூழ வாழ்வதினாலா ?

5.அதிக சிநேகிதிகள் உண்டு என்று கூறி கொள்வதினாலா ?

6. நன்றாக செலவு செய்து பிறர் மதிப்பை பெற முயற்சிப்பதினாலா?

எப்படி?

எப்படி என்றால் – ஒரே வழிதான் !!!

உன்னை மதித்து ,உன் உடலை மதித்து உன் மனதை எந்த சபலத்திற்கும் உட் படுத்தாமல் உன் உணர்வுகள் சொல்வதற்கு ஏற்ப , உன் பாதையை வகுத்துக் கொள்ள வேண்டும்.

சமுதாயம் மிகவும் முக்கியம்.

அதில் வாழும் நலிந்த , கடைகோடி மக்களை , உழைப்பை நாம் உண்டு , உறங்கி, உலாவி வருகிறோம் என்பதை மறந்து விடக் கூடாது.

நம் பழக்கத்தால் , நான் இப்படித்தான் என்கிற புரிதலை ஏற்படுத்தி நம் பாதையை சரியாக செப்பனிட வேண்டும்.

பிறரின் மதிப்பீடுகள் நம்மை சிறுமை படுத்த விடக் கூடாது. இங்கு ஜிட்டு கிருஷ்ண மூர்த்தியின் வாழ்வியல் தத்துவம் பெரும் உதவியாக இருக்கும்.

மேலும் இந்த செயல்கள் நம்மை அடுத்த நகர்வுக்கு உள்ளாக்கி , நம் ஒத்த எண்ணங்கள் உடைய நண்பர்களை நமக்கு உருவாக்கி நம் படைப்புக்கு ஒரு புதிப் பொழிவை ஏற்படுத்தி நம்மை இந்த பிறப்பின் மேன்மை பற்றி நன்கு உணர வைக்கும்.

இது சத்தியம் !!!

இது உண்மை !!!

இதைத்தான் ஜிட்டு கிருஷ்ண மூர்த்தி

வாழ்வை ஒரு ஜீவ நதியாக மாற்றி வாழ கற்றுக் கொள் ! என்கிறார்.

முயற்சி திருவினை ஆக்கும்.

# என் படைப்பு

மலைகள் குகைகள் கொண்டது குறிஞ்சி
மலைகளை குடைந்து இருப்பிடம் கண்டு,
சிலைகளை வடித்து குன்றுகள் தோறும் ,
சிற்பங்கள் வரைந்து சிந்தனை வளர்தனன்!
ஓசைகள் கேட்டு – ஒலியினை வடித்து,
எண்ணம் வளர்த்து; எழுத்துகள் படைத்து,
தமிழை வளர்தனன் பண்பாடு காத்தனன்!
சமயம் வளர்ந்தது -சமணம் நிலைத்தது,
சித்தன்ன வாசல் வரலாற்று சான்று,
சைவம் வந்தது , கோயில் பிறந்தது,
குளங்கள், குட்டைகள் குடிகள் போற்றினன் !
மாறுதல் ஒன்றே மாறாதது என்பதால்,
தமிழும் மாறியது , தமிழரும் மாறினர்,
முல்லை, மருதம், நெய்தல், பாலை ,
குடிகள் பிறந்தன தமிழும் வளர்ந்ததுவே!!

வயது 70 ஐ கடந்து இருக்கும். அடர்ந்த புருவம் .எடுத்து வாறி கட்டிய முடி .சடை போடவில்லை.

நல்ல சிவப்பு நிறம். பார்த்தால் ஐரோப்பியர் என்று சொல்லிவிடலாம்.

இடம் : ஐராதீஸ்வரர் கோயில், தாராசுரம்.

காலை 7.30 மணி சனிக்கிழமை. தனியாக கோயிலில் வலம் வந்து கொண்டு இருந்தார்.

நான் தினமும் அங்கே நடைப்பயிற்சி மேற்கொள்வேன்.

அவர் தெய்வநாயகி அம்மன் உடன் உறை ஐராதீஸ்வரர் சாமி கோயிலுக்குள் நுழைவதைக் கண்டேன்.

ஏதே என்னுள் மனசு தவித்துக் கொண்டு இருந்தது. அது அவரை நோக்கி நடக்க செய்தது .

கால்கள் நிடந்தன .அவர் வெளி கோபுரத்தை பார்வையிட்டார்.மிதுவாக நடந்தார் .பிறகு பன்புறம் உள்ள விமானத்தை பார்த்து அதை கமேரவிற்குள் பதிவு பார்த்து ஏற்றுக் கொண்டார்.

பிறகு ஒவ்வொறு கற்சிற்பத்தை உற்று நோக்கி அங்கேயே 3 நிமிடங்களுக்கு மேல் நின்று பார்த்து, சிலாகித்து, உணர்ந்து, குறிப்புகளை எடுப்பது என்னை பெரிதும் ஆச்சரியதிற்கு உள்ளாக்கியது.

அவரிடம் மெதுவாக சென்று என்னை அறிமுகம் படித்துக் கொண்டேன்.

அவர் ஆங்கிலத்தில் புரியும்படி பேசினார்; தன்னை ஒரு ஜெர்மானியர் என்றும் சொன்னார்.

நான் அவரிடம் அக்கறை இருப்பது போல் காட்டிக் கொள்ளலாம் என நினைத்து ‘ஏதாவது லோக்கல் கைட்டு கொண்டு தெளிவு பெறலாமே என்று சொன்னவுடன் என்னை ஒரு பார்வை பார்த்தார்.

நீ எல்லாம் இந்த மண்ணின் மைந்தன் ; என்ன தெரியும் உனக்கு எல்லாம்' ! என்பது போல் இருந்தது.

சற்றே சுகாரித்துக்கொண்டு மீண்டும் பேச்சை தொடர்ந்தேன் – அவர் தன்னைப் பற்றிய சிறு குறிப்பை என்னிடம் பகிர்ந்து கொண்டார்.

"நான் ஜெர்மனியில் உள்ள "குட்டன் பெர்க்" என்ற நகரில் இருந்து வருகிறேன் ; உங்களுக்கு தெரிந்து இருக்கும் , முதன்முதலில் எழுத்தை காகிதத்தில் அச்சடித்து புரட்சி பண்ணிய ஒரு வரலாற்று சிறப்பு மிக்க நகரம் அது " என்றார்.

'ஆமாம் தெரியும் என்றேன்' இதற்கு எதிர்வினையாக 'நான் பல சிற்பங்களை ஆய்வு செய்து வருவதாகவும், பல கோயில்களுக்கு சென்று வந்ததாகவும் கூறினார்'.

இங்கு வருவதற்கு முன்பு திரு தெய்வநாயம் (தொல்பொருள் ஆய்வாளர் கரந்தை , தஞ்சை) அவர்களை சந்தித்து வந்தேன் ,அவர் பல குறிப்புகளும், வியக்கங்களுடன் கூடிய புத்தகத்தை எனக்கு பரிசளித்தார் என்று அவர் சொன்னதும் நான் வாயடைத்து நின்று விட்டேன்.

எத்தனை பேருக்கு தெரியும் தீரு தெய்வநாயகம் – தராசுரம் ஐராதீஸ்வரர் கோயிலை பாரம்பரிய சொத்தாக மாற்ற காரணமாய் இருந்த முன் முதற் சிற்பி என்பது.

வணங்கினேன் என் ஜெர்மானிய நண்பரை .அவர என்னை தட்டிக் கொடுத்து தமிழ் மரபு அறக்கட்டளை நடத்தும் முனைவர் மற்றும் தலைவர் சுபாஷிணி யின் குழுவில் இணைந்து பல இடங்களுக்கு பயணப் பட்டு இருக்கிறேன் என்று சொன்னவுடன் எனக்கு மயக்கமே வந்து விடும் போல் இருந்தது.

தமிழ் மேல் உள்ள ஆர்வம் ஒரு ஜெர்மானியரை தமிழராக மாற்றி இருக்கிறது.

அவர் என்னிடம் பகிர்ந்து கொண்டவை:

– தமிழர், தமிழர் நாகரிகம், வாழ்வியல், வானவியல், மருத்துவம், உணவு என பல நூல்களை ஜெர்மானிய மொழியில் கற்று வைத்து உள்ளார்.

– உங்கள் ஐராதீஸ்வரர் கோயிலில் உள்ள சிற்பங்களில் பல வரலாற்று உண்மைகள் புதைந்து இருக்கின்றன;

– மகாபாரத போர் ஒரு உதாரணம்,

– தமிழர்கள் நடனக் கலையில் சிறந்து விளங்கினர் என்பதற்கு இங்கே உள்ள கலை கல் வெட்டுகளே சாட்சி !!

– கோயில் விமானத்தின் அழைப்பு ஒரு போர் களத்தில் உள்ள தேரைப் போன்று வடிவமைக்கப்பட்டுள்ளது.

– இந்த தேரை இழுக்க தமிழனின் பிராதன போர் விலங்கான யானைகள்; மேலும் இதன் மீது வாள் ஏந்தி போராடும் பெண்கள் என கூடுதல் சிறப்பு.

அவர் மேலும் தொடர்ந்தான் – அவரே தமிழர் ; நான் தமிழனாக மாற முயற்சிக்கும் ஒரு தமிழன்.

பண்டைய காலத்தில் ( சோழர் காலத்தில் ) தமிழர்கள் வாழ்வியலில் பெண்கள் குடுபத்தில் முதன்மை பெற்றும், வீரத்தோடும், விருப்பப் படியும் வாழ்ந்து பெருமை சேர்த்த பெண் இனம். அவர்களது தன் மானம், தன்னம்பிக்கை, தற்சார்பு பல புராணங்களை ஆங்கிலத்தில் படித்து தெரிந்து கொண்டதாக தெரிவித்தார்.

சோழர் காலத்தில் பெண்கள் ஆண்களை விட இயல், இசை , நாடகம் ஆகிய பண்பாட்டு தளங்களில் தங்கள் விடையங்களை ஆழ பதிவு செய்து விட்டு சென்று உள்ளனர்.

கல்வி என்பது அறம் சார்ந்தும், பாலியல் என்பது உணர்வு சார்ந்தும் பெண்கள் தங்கள் விலத்திற்கு ஏற்ப ஆண் மகன்களை தேர்வு செய்தும் இருந்ததாக சொல்லப்படுகிறது.

ஆண்கள் கட்டிட கலையில் சிறந்து விளங்கினர். மேலும் ஆண்களே அரசர்களாகவும் , அதிக அளவில் புலவர்களாகவும் இருந்தார்கள் என்பது குறிப்பிடத் தக்கது.

பாலியல் வன் கொடுமைக்கு மாறாக அதைப் பற்றிய ஒரு புரிதல் இருந்தது.
குழந்தை பிறப்பை சிற்பங்களாக பல கோவில்களில் இன்றும் காணலாம்.

புறம் பேசுவதும், புற முதுகு காட்டுவதும் ஆண்களுக்கு அழகு அல்ல.

இவ்வாறாக அவர் பேசிக் கொண்டே போனார்.

நான் அவரிடம் ஒன்று சொல்லிவிட்டு வந்தேன்.

உங்கள் ஆய்வுகளை ஒரு புத்தகமாக வெளியிடும் போது அதன் ஒரு பிரதியை எனக்கு அனுப்பி வைக்கும் படி சொல்லிவிட்டு என் முகவரியை கொடுத்து மேலும் தபால் மற்றும் இதர செலவுகளுக்காக ரூ 1000 ஐ அவரிடம் நீட்டினேன்.

முகவரியை பெற்றுக் கொண்ட அவர் , இந்த பணத்தில் நல்ல பயனுள்ள தமிழ் புத்தங்களை உங்கள் நூல் நிலையத்திற்கு பரிசளிக்குமாறு என்னிடம் திருப்பி கொடுத்து விட்டார்.

அங்கனம் எனக்கு தெரிந்தது ஒன்று தான்.நாம் ஒன்றாக சேர்ந்து ஒரு இயக்கத்தை – நூலக இயக்கத்தை முன்னெடுக்க வேண்டும் என்பதே ?

இந்த கால சந்ததியை படிக்க வைக்க வேண்டிய மேலான பொறுப்பு நமக்கு அதிகம் இருப்பதாக உணர்கிறேன்.

இரண்டு நிலையில் மனிதன் தன் மனதை ஆட் கொள்கிறான்.

ஒன்று – விளையாட்டு,

இரண்டாவது – வாசித்தல்.

புத்தக வாசித்தல் ; நானே இதற்கு ஒரு காரணியாக இருக்க வேண்டும் என்று நினைத்து அநுதினமும் (பிரதி வியாழன் விடுமுறை) எங்கள் வீதி ” சிவ குருநாதன் செந்தமிழ் ” நூல் நிலையத்திற்கு சென்று படித்து வருகிறேன்.

படிக்க, பிறரிடம் விவாதிக்க, நல்ல பண்புகளை வளர்த்தெடுக்க வாசிப்போம் ! வாசிப்போம் !

# கதம்பம்

எங்கள் வீட்டின் அருகே அரசலாறு பாய்ந்து ஓடுகிறது.

பாய்ந்து ஓடும் – காவேரியில் தண்ணீர் திறந்து விடும் போது; மற்ற நேரங்களில் சிறு சிறு ஓடையாய் தென்படும்.

நீர் ஓடைகள் நீர் திட்டுகளாக மாறும். பிறகு திட்டுகளில் மணல் சுரண்டடப்பட்டு பள்ளமும், படுகுழியுமாகவும் காட்சி தரும்.

இது நடைமுறை நிகழ்வு.

இந்த நீர் திட்டுகளின் ஓரம் பாத்தி கட்டி , நாத்து நட்டு , நீர் பாட்சி , பயிரிட்டு சாகுபடியும் நிகழும்.

ஒரு புறம் காவேரி தாய் நெகிழியை சுமக்கிறாள் ; மறுபுறம் இருக்கும் வீடுகள், மருத்துவ மனைகள், உணவு விடுதிகள் ஆகியவற்றில் இருந்து வந்து சேரும் கழிவுகளும் காவேரியின் கிளை ஆறுகளை அலங்கரிக்கும் கண்ணீர் புக்கள் !!!

யாரைச் சொல்ல ; என்ன சொல்ல ...

நானும் தான் ஒரு விதத்தில் காரணமாக இருக்கிறேன்- எப்படி தட்டிக் கேட்பது என தெரியாமல் , இப்படி தம்பட்டம் அடிக்க ?

கேட்டதற்கு நன்றி .

எங்கள் தெரு

எங்கள் தெருவை எடுத்துக்கொள்ளுங்கள் ; வரும் போதும் ,போகும் போதும் சதா சர்வ தினமும் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறார்கள் – துப்புறவு பணியாளர்கள்.

மக்கும் குப்பை – இவற்றில் காய்கறி கழிவுகள், தோட்டக் கழிவுகள், முட்டை ஓடுகள், காய்ந்த மலர்கள், வாழை தோல்கள் என பல....

மறு சுழற்சி அல்லது மக்கா குப்பை- பிளாஸ்டிக், பொருட்கள் , அலுமினியம், இரும்பு என பல... பிரித்து இரண்டு குப்பை தொட்டியில் இடும்படி பல தடவை சொல்லியும் எந்த ஒரு மாற்றமும் நிகழவில்லை.

ஏதோ நம்மை விட்டு குப்பை அகன்றுவிடுவதாக நினைக்கிறோம். ஆனால் இது மறு சுழற்சி ஆகமால் மேலும் நம் மனித சமுதாயதற்கு கேடு விளைவிக்கின்றது என்பது தெரிந்தும் யாரும் கேட்பாரில்லை.

எங்கள் தாராசுரம் காய்கறி மார்கெட் உள்ளே “திடக்கழிவு மேலாண்மை கூடம்” சிறப்பாக செயல்பட்டு வருகிறது.

அவர்கள் செய்யும் பணி இறைப்பணி, அவர்களுக்கு என்று கோயில் கட்ட வேண்டும். அப்படி ஒரு சுத்திகரிப்பு செயலை மனிதகுலம் வாழ செய்து கொண்டு இருக்கிறார்கள். அவர்களை மனதார வணங்கி வந்தேன்.

திரும்பி வரும் வழியில் காய்கறி அங்காடியின் எதிர்புறம் சுமார் 20 க்கும் மேற்பட்ட பணியாளர்கள் அரசலாற்றின் கரையோரம் இருக்கும் குப்பை ( நெகிலி) எடுத்துக் கொண்டு இருந்தது என் கண்களில் இரத்தத்தை வரவழைத்து.

இது என்ன சமூகம்? ; இந்த நிலையை யார் சொல்லி புரிய வைப்பது ? இந்த படிப்பு எப்படி சாத்தியமாகும்.

சமூக அக்கறை உள்ளவர்கள் ஏன் இந்த விசயத்தில் மெத்தனம் காட்டுகிறார்கள் ?

கழிவுகளை பிரிக்காமல் விட்டால் அந்த வீட்டிற்கு தினமும் ரூ 100 முதல் அபராதம் விதிக்கப்படும் என்று சொன்னால் திருந்த வாய்ப்பு இருக்கிறதா ?

இது மிகவும் அவசரப் பிரச்சனை. நாம் ஒவ்வொரு ஊரையும் ” பள்ளிக்கரணை” யாக மாற்றினால், தமிழகத்தில் ‘அகம்’ இருக்காது என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

பயணம் – மாறியது

மும்பை மார்க்கம் தூத்துக்குடி சென்னை ரயில் 3.45 க்கு வந்து அடைந்தது.

என்ன ரமேஷ் ,வா, வா, வா, ‘நீ வருவேன்னு நான் அரை மணி நேரத்துக்கு முன்பே காத்து இருக்கிறேன்.

நீ வருகிற ‘ தூத்துக்கு மும்பை எக்ஸ்பிரஸ் ‘ ரயில் திங்கள் கிழமை 3.45 க்கு வரும் , போய் அழைத்துக் கொண்டு வா என்று அண்ணன் ஏற்கனவே சொல்லி விட்டார். ‘

ஏதோ அப்பவுக்கு எதிர் பாராத “மீட்டிங்” இருந்ததால் இரண்டு டிக்கெட்யை Cancel செய்து நீ விரும்பியதால் உன்னை மட்டும் ஞாயிறு 10.30 காலை கும்பகோணத்தில் இருந்து ஏற்றி விட்டதையும் கூறினார்.

உன் அப்பாவும், அம்மாவும் காலை 6 மணிக்கு விமானம் மூலம் வந்து சேர்த்து விட்டனர்.

“ஏன் அவனை மட்டும் தனியே அனுப்பி விட்டாய்” என்று கேட்டதற்கு உன்னுடன் படிக்கும் சக மாணவனும் அதில் சோலாப்பூர் வரை வருவதால் உன் விருபத்திற்கு ஏற்ப டிக்கெட்டை கேன்சல் செய்யவில்லை என்றும் சொன்னதாக சித்தப்பா சொன்னது அவனை அலைக்கழிக்க செய்தது; அதைக் காட்டிக் கொள்ளாமல் ஆமாம் என்று சொல்லி தலையை குனிந்து கொண்டான்.

கார், ஒரு மணி நேர பிரயாணத்திற்கு பிறகு ‘கார்வெஸ்ட்’ என்கிற அவர்கள் வாழும் நகர் புற பகுதிக்கு வந்து அடைந்தது.

அப்பா, ஆற அமர அவனைப் பார்த்து –

” எப்படி இருந்தது பயணம்” மதியம் சாப்பிட்டாயா ; ‘வா குளித்து விட்டு மாலை எல்லோரும் சத்திரபதி சிவாஜி டெர்மினஸ் சென்று பார்த்து விட்டு வருவோம் ‘ என்று சொல்லி முடிப்பதற்குள் அம்மா அவனை ஆறத் தழுவினாள்.

அவன் அழுதது அவர்களுக்கு மட்டும் தான் தெரியும்.

பிறகு வந்த இரண்டு நிமிடங்கள் அவன் தன் இறுப்பை உணர்வதற்குள் கால தேவனின் மடியில்

சரணடைந்தான்.

"யாருக்குத் தெரியும் அவர்கள் வீட்டுச் சாமாச்சாரம்"

சுபம்.

# கோண்ட், கோண்ட்ஸ், கோண்டோ லேண்ட்

நான் செய்தியாக படித்தது :- 50 வருடங்களுக்கு முன்பு , இப்போது ஞாபகத்தில் வருகிறது – நன்றி ராகுல் காந்தி பாத யாத்திரை .

அப்போது நான் ‘எட்டாவது ‘ வகுப்பில் படித்துக் கொண்டு இருக்கிறேன்.

வீட்டிற்கு குமுதம், ஆனந்த விகடன் போன்ற வார பத்திரிக்கைகள் தான் பிரதான செய்திகளை வார, வாரம் கொண்டு சேர்க்கும் சமுதாய ஊடகங்கள்.

சிறுகதை, தொடர்கதைகள், சினிமா போக “துணுக்குகள் ” சிறுவர்களை மிகவும் கவர்ந்த ஒரு பகுதியாகும்.

ஆகவே அந்த ‘துணுக்குகளை’ சுருக்கமாகவும், சுவையாகவும் கொண்டு சேர்க்கும் கடமை ஆசிரியர் குழுவிடம் இருந்தது.

அவைகள் பல சமயங்களில் சிந்தனைகளை எழுப்பவும் தவறியதில்லை.

அந்த காலத்தில் “விக்கி பீடியா ” கிடையாது; இருந்தும் செய்திகளை தருவதில் கவனமாக இருந்தார்கள்.

வந்த செய்திகளை கவனமாகப் படித்தும், அதன் நம்பகத் தன்மை குறித்தும் அதிக விழிப்புணர்பு இல்லை என்று தான் சொல்லவேண்டும்.

இப்போது ஒரு சின்ன வரி, அல்லது அரை நொடி பேச்சு கூட கூர்ந்து கவனிக்கப்பட்டு “வைரல்” ஆக்கப்படுகிறது.

செய்தியாளர்கள் செய்திகளில் சுவாரஸ்யம் கூட்ட ஒன்று , இரண்டு முரண்களை கூறி அதன் மூலம் ஒரு விவாதத்தை எடுத்துச் செல்வது கால காலமாக

இருக்கும் பத்திரிக்கை நடை முறை உத்தியே !! இதை குறை கூறுவதற்கு இல்லை; எனெனில் செய்தியும் வியாபாரமே .

அந்த காலத்தில் எதிர் வினை ஆற்ற ஒரு சிக்கல் இருந்தது. காரணம் காலம். குறைந்தது ஒரு வாரம் – அடுத்த வார இதழுக்காக காத்திருக்க வேண்டி இருந்தது. வாசகர்களும் இருந்தார்கள்; வாதங்களும் தொடர்ந்தன.

இப்படியான வாதங்களை முடித்து வைக்க ஆசிரியர் குழு ஒரு அறிக்கையை முடிவாக பிரசுரிக்கும்.

– இதன் மூலம் எந்த ஒரு பிரிவினருக்கும் மனக்கசப்பு ஏற்பட்டு இருந்தால் அதற்காக பகிரங்கமாக மன்னிப்பு கோறுகிறோம் ! என்று –

இப்போது அந்த விவாதத்திற்கு வருவோம்:-

அப்படி என்ன அந்த 50 வருட அண்டா காகசம் ; அபூர்வ சாகசம் என்று கேட்கிறீர்களா ?

இதோ,

“கோண்ட், கோண்ட்ஸ், கோண்டோ லேண்ட்” இப்படி ஒரு வாசகம் அந்த துணுக்கில் இடம் பெற்று இருந்தது.

என்னுடைய நினைவு சரியாக இருக்கும் பட்சத்தில் – சமிபத்தில் திரு ராகுல் காந்தி (கன்னியாக் குமரி முதல் காஷ்மீர் வரை ) தன் இந்திய நடை பயணத்தில் ஆந்திராவில் இரண்டு நாட்கள் இருந்த போது பல ஆதி குடிகளை சந்தித்துப் பேசினார் . அவர்களில் இவர்களும் அடக்கம்.

இவர்கள் ‘கோண்ட்ஸ் ‘ இவர்கள் வசிக்கும் இடம் ‘கோண்ட் லேண்ட் ‘ என்றும் கூறப்படுகிறது.

இவர்கள் மலைவாழ் குடியினர்.ஆந்திராவில் ஒங்கோல் மாவட்டத்தில் பூர்வ குடிகளாக அறிப்பட்ட ஒரு சமூகத்தினர்.

அவர்கள் எண்ணிக்கையில் 5000 க்கும் குறைவு. குழு மனப்பான்மை ஆதிக்கம் செலுத்தும்.

அவர்கள் பேசும் மொழி கோண்ட் மொழி .இதில் இந்தி, இந்துஸ்தானி . மராத்தி, தெலுங்கு மற்றும் உருது ஆகிய

மொழிகளின் கூட்டு கலவை.

அவர்கள் தங்களது மொழியின் பெருமையை அறிந்து இருந்தார்கள்.

மேலும் அவர்களுடைய மொழியில் இருந்து தான் ” தெலுங்கு , மராத்தி ஆகிய மொழிக் குடும்பங்கள்” உருவானது என்று கூறும் போது அவர்களின் மொழிப் பற்றை வணங்கி மகிழ்ந்தேன்.

இதில் ஆச்சரியம் என்ன என்றால் ; அவர்களுக்கு எழுத படிக்க தெரியாது.

பேச்சு வழக்கில் மட்டுமே உள்ள ஒரு மொழியை கொண்டாடுவதைப் பார்க்கும் போது ஒரு பரவசம் ஏற்படுவதாக அந்த செய்தியாளர் புகழ்த்து தள்ளி இருந்தார்.

அந்த குழுவின் சார்பாஞ்ச் சொல்லும் போது :- ‘எங்கள் மொழிக் குடும்பம் 5000 ஆண்டு பழமை வாய்ந்தது. நாங்கள் மலையில் வாழும் மக்கள். இயற்கையை போற்றி அதன் வளத்தை பெருக்குவதன் மூலம் நாங்கள் வாழ்வாங்கு வாழ்ந்து வந்ததாத கூறியபோது அந்த உண்மைக்கு இரு கரம் கூப்பி வணங்கி புலகாங்கிதம் அடைந்ததாக செய்தியாளர் மேலும் விவரித்து இருந்தார்’.

இவர்கள் அல்லவோ “கடவுளின் உண்மையான பிள்ளைகள்” .

அப்போதைய விவாதம் இவ்வாறாக தொடர்ந்தது….

எப்படி ஒரு மொழி பேச்சு வழக்கில் மட்டுமே இருக்கும் போது Root Language ஆக இருக்க முடியும் ?

இன்னொறு சிறப்பு – அவர்கள் தங்கள் மொழியை ஆராதனை செய்தார்கள்; மொழிதான் கலாச்சாரத்தின் ஆணி வேராக கருதினார்கள்.

இலக்கியம் , இதிகாசம் பற்றி அவர்களுக்கு தெரிந்து இருந்தது.

ராமனை ” இலட்சிய புருஷனாக” போற்றினார்கள். ராவணன் ஒரு மாய சக்தி என்று நினைத்தனர்.

எது , எப்படியோ , அந்த இனம் இன்றும் வாழ்ந்து

கொண்டு இருக்கிறது .உண்மை எப்போதும் சாவது இல்லை.

சுயநிதிக் குழுக்கள் அவர்கள் சமுதாய உயர்வுக்கு வழி வகுத்து இருக்கிறது.

நெசவு அவர்களது ‘அடி நாதமாக ‘ இருக்கிறது. விவசாயம் செய்கிறார்கள். கட்டிடத் தொழில் மற்றும் கலை நயத்துடன் கூடிய கைவினைப் பொருட்கள் பல செய்து வாழ்க்கையில் மேலும் உயர்ந்து இருக்கிறார்கள்.

இப்பெரு மக்களை நினைத்து நாம் பெருமை கொள்ளலாம்.

# சிலையைவிட்டு தெய்வம் புறப்பட்ட கதை......

அன்று ஞாயிறு.காலை 12 மணி இருக்கும். வீட்டு வாசல் கதவின் அருகில் ஒரு கம்பிரமான நபர் நின்று கொண்டு இருந்தார்.

அவர் கோட்டும் , சூட்டும் அணிந்து இருந்தார். நல்ல சிகப்பு நிறம். வயது 45 வரை இருக்கலாம்.

வாசல் அருகில் ஒரு ஜீப் நின்று கொண்டு இருந்தது; அதன் மேற் கூறையில் சிகப்பு கலர் லயிட் எரிந்து கொண்டு இருந்தது.

வீட்டிற்குள் வரலாம என்று கேட்டவரை “வாங்க” என்று சொல்லி வரவேற்றான் செல்ல துரை.

குடும்பத்தில் உள்ள அனைவரையும் கூப்பிட்டார் அந்த நபர். மனைவி மக்கள் என்று ஒன்று திரண்டனர். முதியவர்கள் இருவர் உட்பட மொத்தம் 7 நபர்கள், அதில் 3 குழந்தைகள்.

ஆக முதியவர்கள் துரையின் பெற்றோர்கள் தான் என்று முடிவுக்கு வந்தார் அந்த வெள்ளை நிற ஆசாமி.

நீண்ட கவரை எடுத்தார்; அன்புதுரையிடம் கொடுத்து, எல்லோரையும் சேர்த்து புகைப்படம் எடுத்துக் கொண்டார்.

பெரியவர்கள் இருவரையும் அழைத்தார் .அவர்கள் காலில் விழுந்து வணங்கினார்.

இந்த நிகழ்வுகள் எல்லாம் புகைப்படம் மற்றும் ஒளிப்படமாக எடுக்கப்பட்டது.

சால்லைகள் செல்ல துரைக்கு போத்தப்பட்டு, குழந்தைகளுக்கு இனிப்புகள் கொடுக்கப்பட்டன. மனைவி செல்லம்மாள் பூங்கொத்தை பரிசாக பெற்றாள்.

என்ன நடக்கிறது என்று எல்லோரும் வியந்தனர்.
அவரே மேலும் சொன்னார் :-
“நான் உங்கள் மாவட்டத்தின் கலெக்டராக நாளை பொறுப்பு ஏற்க உள்ளேன். உங்கள் சேவையால் ‘சின்னப்பட்டி ‘ கிராமம் தொடர்ந்து 10 வருடங்களாக “பசுமை கிராமம், தூய்மை கிராமம், தன்னிறைவு கிராமம் ” என மாநில அளவிலும் , இந்திய அளவிலும் ஏன் உலக அளவிலும் பேசப்பட்டு வருகிறது என்றால் அதற்கு உங்களுடைய அளப்பரிய உழைப்பே காரணம் என்றார்”.
நாளை என் பதிவி ஏற்பு விழாவில் இந்தப் ‘புகைப்படம் ‘ மற்றும் ‘ஒளி நாட ‘ வெளியிட திட்டமிட்டு உள்ளேன் என்று சொன்னவுடன் எல்லோரும் சிலை ஆனார்கள்.
தெய்வம் மட்டும் வீட்டை விட்டு வெளியே புறப்பட்டது.
மெதுவாக கவரை எடுத்து படிக்கலானான்.
அதில் அவனுக்கு மேற்பார்வையாளராக பதிவி உயர்வு வழங்கப்பட்டு இருந்தது.
இது நாள் வரை தூய்மை காவளராக தன் பணியினை செய்தவனுக்கு நாளை செய்ய வேண்டிய பணிகளை திட்டமிட தொடங்கினான்.

# என் இருப்பு

இப்போது எல்லாம் எங்கள் வீட்டில் ‘சிட்டுக்குருவி’ கூண்டு கட்டுவது இல்லை. அதைப் பார்த்து பல வருடங்கள் ஆகிறது. எங்கள் குழந்தை வளர்ந்தது குருவிகளையும், காக்கைகளையும், மைனாக்களையும் பார்த்து ,பழகி விளையாடுவதே என்று நினைக்கும் போது ஒரு பெரிய ‘இறுக்கம்’ இப்போது என் மனதை நிலை குழையச் செய்கிறது.

“ஆமாம் எங்கள் வீட்டின் முன்புறமும், பின்புறமும் ‘இரண்டு ‘ பெரிய அலைபேசி கோபுரங்கள் அலங்கரிக்கின்றன”

எங்களை மகிழ்வித்த பறவைகளே ! – நீங்கள் உண்ண , உறங்க , உறவாடச் சென்ற இடம் பற்றி கொஞ்சம் சொல்லுங்கள். நாங்களும் அங்கே வரத் தயாராகி விட்டோம்.

ஒரு திருத்தம்- உங்கள் உறைவிடத்தில் நிலை கொள்வது எங்கள் நோக்கம் அல்ல, இந்த நிலை இல்லா வாழ்க்கையில் இருக்கும் போதே ‘இறந்து கொண்டு இருப்பதை விட, உங்கள் இறைச்சல் இறைத்தன்மை வாய்ந்தது ; அந்த சுவாசத்தை ,சுகத்தை கொஞ்சம் பகிர எங்களிடம் வந்து செல்லுங்கள்.

இப்போது வயது எனக்கு 63 ஆகிறது. காலை 6.25 மணி அளவில் என் மொட்டை மாடியில் அமர்ந்து (கடவுளுக்கு நன்றி-என்னால் இரு கால்களையும் மடக்கி அமர்ந்து சுமார் 15 நிமிடங்கள் வரை சூரிய உதயத்தில் உவகை கொள்ள முடியும்) .ஒரு ‘மாலை’ ஹரே கிருஷ்ண மந்திரத்தை சொல்ல ஆரம்பித்தேன்.

ஹரே கிருஷ்ண , ஹரே கிருஷ்ண, கிருஷ்ண , கிருஷ்ண,

ஹரே , ஹரே ,
ஹரே ராம , ஹரே ராம,
ராம , ராம,
ஹரே , ஹரே .

இது போன்று 108 முறை சொன்னால்,
ஒரு மாலை பூர்த்தி ஆகும்.

எனக்கு 8 நிமிடங்கள் ஆனது. அந்த 8 நிமிடத்தில் நான் பார்த்து, கேட்டு , உணர்ந்து, நுகர்ந்து ‘மனதோடு ‘ பேசி லயித்த தருணங்கள் என்
“இருந்தலியலை” செம்மை படுத்தியது.

என் வாழ்வியலில் ஒரு மாற்றத்தை ஏற்படுத்தியது.
என் புரிதலில் ஒரு தெளிதல் ஏற்பட்டது.

ஆம். என்னால் ‘எழ’ முடிந்தது. (அமர்ந்த இடத்தில் இருந்து எழ முடிகிறது. என்னைச் சுற்றி நடக்கும் சம்பவங்களுக்கு என்னை இட்டுச் சென்ற பிறகு அதில் இருந்து ஒரு விடுதலையை அது தருகிறது.

நான் கேட்டவை : –

1. அணிலின் கீச்சிடும் “இறைஞ்சல்கள்”,
2. சிறு சிறு பறவைகள் என் வீட்டின் பக்கத்தில் இருக்கும் தோட்டத்தில் காலைப் பொழுதை வரவேற்று தன்னை தயார் படுத்திக் கொண்டு இருக்கின்றன.
3. மயில்கள் ஓட்டு வீட்டில் அமர்ந்து , பின் உணவுக்காக தோட்டத்தில் கொள்ளை கொள்கின்றன.
4. வவ்வாள்கள் பறந்து மறைகிறது.
5. என் உடல் உயிருடன் “இருப்பதை ” உணர்கிறேன்.
6. என் ஐம்புலன்களும் ஒருங்கே இணைந்து என் உயிரோடு உறவாடி என் உடலுக்கு ஒரு உன்னத அனுபவத்தை தருகிறது.

இது தான் பேரானந்தம்:

இங்கே நான் சொன்னது ஒரு தவம்.
அவர் அவர் எண்ணப்படி . மத சம்பரதாயங்களுக்கு ஏற்ப எசு பிரானின் கட்டளைகளையோ , அல்லாவின் அருள் வாக்கியங்களையோ, புத்தரின் மெய் மறந்த நிலையில் மனதை நாம் பார்வை இட வேண்டும்.

அந்த பார்வை ஒரு கணத்தில் மறைந்து , ஒரு நிகழ்வை நம்மிடத்தில் நிகழ்த்துகிறது.

அப்போது புரியும் நாம் யார் ? என்று .

ஆம் ! நான் இறைவனின் கருணையினால் , உலகில் வாழும் இன்ன பிற உயிரினங்களின் ஒத்துழைப்பால் , சக மனிதர்களின் தன்னிகரற்ற சேவையால் உண்டு, உடுத்தி, உறங்கி , உலாவிக் கொண்டு இருக்கிறேன்.

என் “இதயம்” உள்ள வரை அதை இயக்கி , என்னை ஆட்கொண்ட ‘அருட் பெருஞ்ஜோதியாகிய அருட் பெருங்கடலே ‘ – உன் தனிப் பெருஞ் கருணையினால் எனக்கு உள்ள வாழ்கை சவால்களை எதிர் கொள்கிறேன்.

அதுவே வாழ எனக்கு ஒரு உந்து சக்தியாக இருக்கிறது. அந்த சக்தி இருக்கும் வரை நான் உயிர் வாழ பெற்ற கடனை திரும்ப செலுத்த முயல்கிறேன்.

அந்த முயற்சி பொறுமை, அன்பு, சேவை, என்கிற மூன்று அம்சங்கள் கொண்டு இயங்க உன் உதவி தவிர எங்கே நான் இறைஞ்சுவது.

ஆகவே இந்த வாழ்கை என்ற பயணித்தல் என்றென்றும், எப்பொழுதும், எங்கேயும் என் உடன் இருந்து என்னை வழிநடத்து.

இந்த பயணத்தில் என் மனைவி, என் மக்கள், என் பெற்றோர் , என் உறவினர்கள், நண்பர்கள் , எங்கள் ஊர் என்பதைத் தாண்டி நம் மக்கள், நம் தேசம், நம் உலகம் என்று விரிய என் இதயத்தில் என்றென்றும் உன் நினைவுகள் மற்றும் கருணையினால் என் இதயம் தூய்மை பெற்று “மீட்சி” அடையும்.

அந்த மீட்சி ஆட்கொள்ளும் வரை அன்பு என்னை ஆளட்டும்.

இறைவா உன் காலடியில்,

செல்வம் ராஜூ,

# அனுபவ யாத்திரை:

எனக்குள் ஒருவனாக இருந்து வங்கியில் 36 வருடங்கள் சேவை செய்து இப்போது ஓய்வு பெற்று 4 வருடங்கள் ஆகிறது.

மகள் கல்யாணத்திற்கு மனைவி அழகாபுத்தூர் சென்று வர கேட்டுக் கொண்டார்.

பிஃஎவ் , கிரேஸூவிட்டி, மற்றும் PL பண வசதி மூலம் வந்த தொகையில் வட்டியாக ரூ25000 வருகிறது.

தேவைகளை பூர்த்தி செய்து, விருப்பங்களுக்கு அப்பால் வாழ பழகிவிட்டோம்.

அழகாபுத்தூர் செல்ல இரு சக்கர வாகனம் வீட்டில் உண்டு. குறைந்தது 1/2 மணி நேரத்திற்குள்

கோவிலுக்கு சென்று வர முடியும்.

படிகாசு நாதர் கோயில் குடந்தையில் இருந்து 7 கி.மி தூரத்தில் அமைந்த சொர்ணபுரீசுவரை வணங்கி, பிறகு தாயார் பாதம் (அழகாம்பிகை) தொட்டு பிரார்தனை செய்து கடைசியாக முருகப்பெருமானை (சங்கு சக்கரத்துடன் காட்சி அளிப்பவர்) தரிசித்து வந்தால் வீட்டில் சுபகாரியம் நடக்கும் என்பது ஐதீகம்.

நான் என் உள் உணர்வுக்கு அடி பணிவேன். அதில் பெரும் நம்பிக்கையும் உண்டு.

காரணம் :- நான் தற்பொழுது நிகழ்கால நிஜங்களை தரிசித்துக் கொண்டு இருக்கிறேன். அதில் கிடைக்கும் அநுபவம் என்னை வழிநடத்துவதாக உணர்கிறேன்.

இந்த “உள் உணர்வு” என்னை நானே பரிசோதனை செய்து கொள்வதில் தொடங்கி, தற்சமயம்
“அந்த உணர்வே ” இல்லாமல் பயணப்பட்டுக் கொண்டு இருக்கிறேன்.

அதாவது என் நிகழ்வுகளை ஆராய்வதை விட அதை

“பார்வையாளனாக ” இருந்து கடந்து செல்ல விளைகிறேன்.

அந்த விதத்தில் என் செயல்கள் சற்று முன் முனைப்போடு செயல்படுவதாக உணர்கிறேன்.

மேலும் என் எண்ணங்களை ஒரு குறிப்பிட்ட கால அளவுகளில் முடிக்க இந்த “சுய நினைவு ” (இருத்தலியல்) பெரிதும் உதவியாக இருக்கிறது என்றால் அது உண்மையே !!

அதே சமயம் எந்த ஒரு செயலும் நடக்க , நடந்து முடிய “நானே” காரணம் என்று கருதாமல் அது -சுய நினைவு; என்னை ஆட்கொண்டு ,சிறிது காலம் இயங்கி பின் என்னை விட்டுப் பிரிவதாக எண்ணுகிறேன்.

என் குருவின் வாக்கியம் இப்போது நினைவுக்கு வருகிறது.

– நீ சில சமயங்களில் பார்வையாளனாக இரு;
– கடந்து செல்;
– சில சமயங்களில் பங்கேற்பவனாக இரு;
– செயல் புரி;
அப்போது தான் உன் அகம் தூய்மை பெரும்.

அவரின் பொன்னான சிந்தனைகள்:-

-இங்கே யாவரும் யாசிக்கத் தான் பிறந்து இருக்கிறார்கள்; பிழைப்பு நடத்துகின்றனர்;
– அரசியல் வாதி வாக்குகளை யாசிக்கி றான்;
– ஆசிரியர் அறிவை யாசித்து அருளுகிறார்;
– தொழில் நடத்துவோர் நுகர்வோரை யாசிக்கின்றனர்;
– தொழிலாளி இறைவனை யாசிக்கிறான்.

காலம் என்கிற “சக்கரம் ” எல்லோரையும் பார்த்துக் கொண்டுதான் இருக்கிறது.

அதுவே உண்மை !!! அதுவே எல்லாம் !!!

சுனாமிக்கு ஏழை , பணக்காரன் என்கிற பேதம் இல்லை. நில பூகம்பத்திற்கு
ஏழை , பணக்கார நாடு என்கிற வேற்றுமை இல்லை.

வளமுடன் வாழ்வோம் . அன்பு, இறக்கம், ஆதரவு ஆகிய பண்புகள் நம்மை ஆட்கொள்ள அந்த பரம்

பொருளை நாடுவோம்.
'தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவருக்கும் இறைவா போற்றி'
மேலே கூறிய அநுபூதி எனக்கு Mini Bus ல் பிரக்ஞையுடன் பிரயாணப் பட்டதால் கிடைத்தது.
அனுபவ யாத்திரை :-
காலை 10 மணிக்கு தாராசுரம் வீட்டுல் இருந்து புறப்பட்டு குடந்தை பஸ் நிலையம் 10.20 அடைந்தேன்.
10.40க்கு அழகாபுத்தூர் ( Mini Bus ) புறப்பட்டது. சாக்கோட்டை தாண்டி சிவபுரம் வழியாக அழகாபுத்தூர்.
நடவே 5 அழகான கிராமங்கள்.அவர்களுக்காக இந்த வண்டி தினமும் செல்கிறது.
ஒரு புறம் அரசலாறு; மறுபுறம் வயல், வாய்க்கால், நெல், சாகுபடி என விவசாயம்.
நான் பார்பது வெறும் பார்வைகளே !!!
என் பார்வைக்கு "உயர்" கொடுக்கும் ஓவியங்கள் – பஸ், ஓட்டுநர், விவசாயம், விவசாயி ;
தீடிரெண்டு பஸ் சிவபுரம் தாண்டி நின்றது. ஊர் கூடி தேர் இழுப்பது போல, கிராமமே வந்தது. நாங்களும்தான் !
அந்த பங்கேற்பில் எல்லோருக்கும் மகிழ்ச்சி ; பஸ் இனிதே நகர்ந்தது.
பேருந்து ஓட்டுநர் தான் அந்தப் பகுதி ஹரோ ! நடத்துனரும் ஓட்டுனரும் அந்தப் பகுதி மக்களின் அன்பையும், மரியாதையும் அதிகம் சம்பாதித்து வைத்து இருக்கின்றனர்.
அழகாபுத்தூர் கோயில் பூசாரி எந்த எதிர் பார்ப்பும் இல்லாமல் , இருப்பதைக் கொண்டு இறைவனை பூஜித்து , பக்தர்களை மகிழ்விக்கிறார்.
இங்கே எல்லா நேரமும் நல்ல நேரமாகக் கருதப் படுகிறது.
ஆம் ! இறைவன் திருவடியில் எல்லோரும் குழந்தைகளே !!!
பேதமை இல்லை ; எந்த பேதமும் இல்லவே இல்லை.

## இடை சருகல்:-

தேவகி, ஒரு சமுக செயல்பாட்டாளர்; எழுத்தாளர்; ஓவியர் என்று பல முகத்தன்மை கொண்டவர்.

அவருக்கு இப்போது வயது 80 ஆகிறது. இன்றும் அவரை சந்தித்து நேர்காணல் காண “காட்சி ஊடகங்கள் காத்து இருக்கின்றன.

அவருடைய பேச்சு இப்போது அதிகம் பகிரப் பட்டு வருகிறது.

ஒரு நிருபர் அவரிடம் பேட்டி காணும் போது :

“மேடம், நீங்கள் சமூக அக்கறை கொண்டவர்; பெண்கள் விஷயத்தில் குரள் கொடுக்கத் தவறியது இல்லை. அது அவர்களுடைய ‘உடையைப் பற்றியோ, மதரீதியான தடைகள் பற்றியோ – ‘அடிப்படை நீதி’-எல்லா மனித குலத்திற்கும் பொருந்தும் என்றும் பேசிவந்து உள்ளீர்கள்”.

என்னுடைய நேரடியான கேள்வி?
“பூனை நடை” என்கிற பெயரில் நடிகைகளும், அவர்களைப் பின் தொடர்ந்து பெண்கள் ( பள்ளி, கல்லூரி உட்பட) தங்களை கேளிப்பொருளாக காட்டிக் கொண்டு , முக நூலிலும், இன்ஸ்டாகிராமிலும் பகிர்ந்து வருவதை எப்படி பார்க்கிறீர்கள் ?

ஒரே வார்தை; அதுவே வாக்கியம். இது ஒரு மாயை. Like பெருவதற்காக செய்யப்படும் ஒரு “விளையாட்டு வலை,” . சிறிது காலம் களித்து புளித்து விடும். மனிதனுக்கு மறதியே வரம்.

இது தனி மனித உரிமை; மேலும் இந்த செயல் பிறர் மனதை , மதத்தை, இனத்தை புண்படாத விதத்தில் இருக்கும் பட்சத்தில் இதை ஒரு ‘பொழுது போக்காக’ எடுத்துக் கொண்டு கடந்து செல்வதே மேல்!

ஆண் தன்னை ஆளுமையாக காட்டுக் கொள்ள பல வழிகளை நாடுகிறான். இதுவும் ஒருவகையில் பெண்கள் தங்கள் “ஆளுமையை ” இந்த வழியில் வெளிக் கொணர்கிறார்கள் என்று எடுத்துக் கொள்ள வேண்டயது தான்.

இதில் பெண்மை, கற்பு என்று தொடர்பு படுத்தி பேசுவது அபத்தம். இது ஒரு மனப்போராட்டத்தின் வெளிப்பாடு; இதை ஏற்றுக் கொள்வதும்; நிராகரிப்பதும் அந்த அந்த சமூகத்தின் சிந்தனைக்கு விட்டு விடுகிறேன்.

இதுவே உலவியில் ரீதியான பதிலாகவும் இருக்கும்.

வேறு ஏதாவது ‘விடயம்’ இருந்தால் , இந்த காணொளியைப் பார்பவர்கள், ‘கமெண்ட்’ செய்ய கேட்டுக் கொள்கிறேன். சமூகமாக இருந்து சுமூகமாக என்ன செய்ய முடியும் என்பதைப் பார்ப்போம்.

மேலும் கோட்பாடுகளும் , சிந்தனைகளும் நாட்டுக்கு நாடு, இனத்துக்கு இனம் , அரசியலுக்கு அரசியல் வேறுபடும்.

அமெரிக்காவில் “பொருளதாரக் குற்றம்” பெரிய குற்றம். மேலும் ஒருவருடைய விருப்பத்தில் அல்லது சுகந்திரத்தில் தலையிட அரசுக்கும் உரிமை இல்லை.

ஆனால் , நம் நாட்டில் “தலை கீழ் “.

பொருளாதாரக் குற்றம் மன்னிக்கப்படுகிறது . தனிநபரின் அந்தரங்கம் பேசு பொருளாக மாறுகிறது.

வாழ்வியலும் , ஒழுக்கமும் பொருளாதாரத்தில் இருந்து மீட்கப் படவேண்டும்.

தெளிவு வரும் ; தெளிவோம் !!!.

**************************************

யாருக்காக????

“படிக்கும்போதே ஒரு குறிக்கோளுடன்படிக்க வேண்டும்.நம்முடைய இலக்கு என்ன?எதற்காக படிக்கிறோம்?இந்த சமுதாயத்தில் நம் பங்கு என்ன?-என்பதைப் பற்றிய ‘புரிதல் ‘ நம்முடைய குழந்தைகளுக்கு அறவே இல்லை என்றே சொல்ல

வேண்டும்.
“மகன் +2 வகுப்பிலும் , மகள் 10th வகுப்பிலும் படித்துக்கொண்டு இருக்கிறார்கள். அவர்களுக்கு இன்னும் 60 வருட வாழ்க்கையை (அமைத்துக் கொடுப்பது) பற்றி அலுத்துக் கொண்டே ‘என்ன நான் சொல்வது சரிதானே ? என்ற படி காலை பத்திரிகை செய்திகளை படித்துக் கொண்டே வந்த காப்பியை சிறிது தொண்டையில் மூழ்கிய படியே வினவினார் !
எல்லாம் சரி, ஆனா ஒன்றும் எனக்கு சரியாக படலே ;
என்னடி ;?
‘ ஆமா போங்க, நாளு நாளா நம்ப சமைய பாத்திரம் சுத்தம் செய்றவங்க வரவே இல்லை ;நானும் போன் பண்ணி பார்த்தேன். எடுக்க மாட்டேங்கிறாங்க,
நம்ப பையனை ஸ்கூல் போகும் போது பார்த்து விட்டு போகச் சொன்னேன்.எங்க கேட்கிறாங்க? –
உங்க மகளைப் பற்றி பேசவே வேண்டாம் .அப்படி வளர்கிறேள்’.
“என்ன பரத நாட்டியம், கலை , ஓவியம் என்று கற்று பயன்”பெற்ற தாய்க்கு ஒரு கஷ்டம் என்று வந்தால் பதற வேண்டாமோ?’
நீ சொல்றது நன்னா எனக்கு புரியுது; என்னை என்னச் செய்ய சொல்ற …
‘ஒண்ணும் செய்ய வேண்டாம். என் குறைய மட்டும் சொன்னேன்.அவ்வளவுதான”.
முடிந்தால் வேறு ஏற்பாடு செய்யவும்; இல்லையேல் எல்லோரும் சேர்ந்து “Swiggy” ஆர்டர் பண்ணி சாப்பிடுங்க.-
“எனக்கு மட்டும் தான் என்னால் சமைக்க முடியும்” – அந்த நொடியில் அவள் வாழ்ந்தாள்.
அடிப்பாவி ; இப்படி சுயநலக்காரியாகி விட்டியே !!!
இது அடுக்குமா ????
எழுந்து தன் அண்ணாரைப் பார்த்தாள்.
பார்த்த பார்வை அப்படியே இருந்தது.
அவர் மீது சாய்ந்தாள்.

*************************************

A)ஆகச் சிறந்த காதல் :

அந்த வீடு, இன்னும் எனக்கு ஞாபகம் இருக்கிறது; சுமார் 25ஆண்டுகளுக்கு முன்பு அழைப்பிதழின் பேரில் சென்றபோது அந்த வீடு பழைமை காத்தது. பெரிய திண்ணை. பிறகு முற்றம். நல்ல பரந்த வழிநடப்புகள்.

சிறிய அறை ; பெரிய சமையல் அறை. என்ன சொல்ல !!! அந்த வீட்டைப் பார்ப்பதற்காகவா சென்றான் சாமி ?

இல்லை; இல்லவே இல்லை. அந்த அழகை ,தேவதையை அவள் குடியிருக்கும் வீட்டில் பார்ப்பதற்கு ஏதோ சந்தர்ப்பம் ஏற்படுத்திக் கொண்டு போக வேண்டிய தருணம் பார்த்து போனான் என்பது தான் உண்மை !

அந்த உரையாடல்கள், விதவை அம்மா, சகோதரன் கல்யாணம் ஆகவில்லை;கரிசனங்கள்; கவனிப்புகள் என்று எல்லாம் பிடித்து இருந்தது சாமிக்கு .

அப்போ , எதற்கு இந்த ஒப்பனை.எல்லாவற்றையும் அடுத்த நாள் சொல்லிவிட வேண்டியதுதான் என்று நினைத்து காத்து இருந்தான்.

அவளே சொன்னாள் : எனக்கு முறைப்படி வரும் ஞாயிறு பெண் கேட்டு வருகிறார்கள். அதற்காக முதல் நாள் சனிக்கிழமை நாங்கள் குடும்பமாக குலதெய்வ வழிபாடு செய்ய வேண்டி இருப்பதால் ‘ விடுப்பு வேண்டும்’ என்று நீட்டினாள் கடிதத்தை.

சாமி, மேலாளர் அமோதித்தார்; அனுமதித்தார்; இதயம் கேட்டது :-

“இனிமேல் அப்படி சொல்லாதே என்று யாரை கேட்பது ?”

B)ஆகச் சிறந்த அரசியல் :

நன்றாகவே தெரியும், இந்த காரியத்தை செய்தால் எதிர்வினை இப்படித்தான் இருக்கும் என்று .

எதற்கும் தன் நெருங்கிய ,ரகசிய நபர்கள் சிலருடன் இதைப் பற்றி யோசித்து , இந்த source ஐ பயன்படுத்தி இந்த lead ஐ பிடித்து ஒரு அரசியல் செய்ய வேண்டும் என்று மேலிடம் சொல்வதாக பகடி அடினான் தலைவன்.

“ஏன், செய்தால் என்ன ? இதில் ஒன்றும் நமக்கு இழுக்கு ” இல்லை என்று ஒரு சாரரும்; ‘இருந்தாலும் நாமும் அக்கா, தங்கையுடன் பிறந்து இருக்கிறோம் எதற்கு இந்த வம்பு ‘ என்று மற்றொரு சாரரும் தங்கள் கருத்துக்களை முன் வைத்தனர்.

எல்லாம் “காலத்தால் மறக்கப்படும், அல்லது மறைக்கப்படும்” என்கிற ‘நியதி’ உண்மை என்பதை உணர்ந்த தலைவன் தன் “இரண்டு” செயலாளரிடமும் இப்படிச் சொன்னான்.

உங்கள் இருவரில் ஒருவர் நம் கட்சியை விட்டு விலகுவதாக அறிவித்து அதற்கு காரணம் “நீதி கேட்டேன் ; நிதி வந்தது ” என்று சொல்ல வேண்டும் என்றும் ;அதற்கு மறுநாள் ‘தான்’ ஒரு press meet ஏற்பாடு செய்து அதற்கு விளக்கம் அளிப்பதாகவும் சொன்னார். இருவரும் கைநீட்டினர்- எவ்வளவு தொகை கொடுப்பதாக இருக்கிறீர்கள் !?

அடுத்த நாள் செய்தி :

அந்த உறுப்பினர்கள் இருவரும் கட்சியின் அடிப்படை பதவியில் இருந்து நீக்கப்பட்டனர்.

# காலையில் ஒரு வசந்தம்

காலையில் நடைப்பயணம் சென்று கொண்டு இருந்த போது ஒரு காட்சி என்னை கண்டறிய காரணமாகியது.

இரண்டு நபர்கள் என் பாதையில் நடந்து வந்து கொண்டு இருந்தார்கள்.

அவர்கள் பின்னே வருவது மட்டும் என்னால் யூகிக்க முடிந்தது. அவர்களின் குரல்களை வைத்து அவர்கள் பெண்கள் என்று அனுமானித்துக் கொண்டேன்.

நான் அப்படியாக எந்த ஒரு சம்பாசணைகளையும் ஒட்டு கேட்பது இல்லை.

அந்த அளவிற்கு நான் என் நடைபயணத்தில் அல்லது என் உடம்பின் மீது அதிக அக்கரை செலுத்திக் கொண்டு இருக்கிறேன் என்று நீங்கள் நினைத்தால் அதற்கு நான் பொறுப்பல்ல !!??

இருந்தாலும் இதில் ஒரு உண்மை இருப்பதாக உணர்கிறேன். அதுவே எனக்கு ஒரு வலியை தந்தது.

அந்த வலியை இப்போது காண்போம்.

“அம்மா பசிக்குது” -இது ஒரு சிறுமியின் குரல்.

” எனக்கும் தான் ” – தொடர்ந்தது மற்றொரு ஜீவன்.

இதோ , இங்கே டீ கடை போய் சாப்பிடுவோம்.

இதில் இருந்து பின்புறம் வருபவர்கள் நால்வராக இருக்கக் கூடும் என்பது என் கணிப்பு.

“அம்மா , எனக்கு பசிக்குது வடை , டி வாங்கி கொடு – வந்த இரண்டு குழந்தைகளும் கேட்க அவளும் அங்கு டீ சாப்பிட வந்தவர்களிடம் “சாமி இந்த பொன்னுக்கு பசிக்குது ஏதாவது ” என்று சொன்னவுடன் ஒருவர் 8 வடைக்கு உள்ள காசை உரிமையாளரிடம் கொடுத்து விட்டு சாப்பிட சொல்லிவிட்டு சென்றார்.

நானும் என் பங்கிற்கு டீ சாப்பிடேன்.

அம்மா ‘டீ ‘ வேணும்.

உடனே அவர்களுக்கு நான்கு டீக்கு உள்ள காசை , கடைக்காரிடம் கொடுத்து கொடுக்க சொன்னேன்.

அந்த வடையை அந்த பெரிய பெண் சாப்பிட்ட விதம் இருக்கிறதே , அப்பா , எவ்வளவு சந்தோஷம் . தங்கச்சிக்கு ஒன்றை கொடுத்து சாப்பிடச் சொல்லி பிறகு டீயை கரிசனத்துடன் ஊட்டிய விதம் அன்பின் பரிபூரணம்.

அவர்களிடம் இருந்த ஊசி மற்றும் பாசி மாலையை வாங்கினேன். என்னைப் பார்த்து சிலர் வாங்க தொடங்கினர்.

பிறகு மிதுவாக அவர்கள் தங்கள் பயணத்தை தொடர்ந்தனர்.

நான் அவர்கள் பின் சற்று மிதுவாக சென்றேன். இப்போது என் கையில் ‘கைபேசி ‘-அதில் பாட்டு ஒலித்து கொண்டு இருந்தது.

நான் அவர்களை கவனிக்க வில்லை என்பதற்கான ஏற்பாடு.

பேச்சு தொடர்ந்தது.

மீனா, உனக்கு ஒன்னு சொல்றேன்;என்னைப் பற்றி கவலை படாதே. என் புள்ளைகளை நான் கரை சேர்த்து விடுவேன்.

நமக்கு அப்பா இல்லை. அம்மா முடியாம இருக்கா ; அதனால அவ சொல்ற அந்த லோடு மேனை கட்டிக்கோ ; அம்மாவையும் பார்த்துக் கிட்டு , உன் வாழ்க்கையும் பார்த்துக் கொண்டு இந்த ஊரிலே இருக்கலாம்.

எதிர் வீட்டு எஜெண்ட் சொன்ன மாதிரி வெளிநாடு போய் ‘வீட்டு வேலை செய்து ‘ புழைக்க ரூ 10000 கேட்கிறான் பாரு , அதை கண்டு ஏமாறதே ?

இங்கேயே நீ 4 வீட்டில் பாத்திரம் கழுவி நல்ல பெயர் வாங்கி வைத்து இருக்கிறாய்.

போதும் உனக்கு இது என்று எனக்கு தோன்றுகிறது.

நம்ம ஊரு தான் நமக்கு சுகம்.

சம்மதம் என்று சொன்னாள் என்று நினைக்கிறேன்

அதற்குள் அவர்கள் பேச்சும் மொழி மாறி வேறு விதமாக சென்றது.

வாழ்க்கையில் எல்லாம் “சிறு சிறு”ஆலோசனைகள் நம்மை கட்டிப் போடுகிறது .

அன்பு திழைக்கும் -அங்கே உண்மை இருக்கும் பட்சத்தில்.

# "வந்தாள் மகாலட்சுமியே!"

நான் எது செய்தாலும் அதில் ஒரு குறை கண்டு பிடிப்பதையே வாடிக்கையாக வைத்துக்கொண்டு இருக்கிறாய்.

அப்படி எதை ஒழுங்காக செய்து முடித்தீர்கள்!

என் தியாகங்களை பட்டியல் இட்டு பிரசங்கம் பண்ண, நான் ஒன்னும் உன் தகப்பன் மாறி அரசியல்வாதி இல்லை?

“”பாருங்க!. இது நமக்கு இருவருக்கும் நடக்கும் குடும்ப பிரச்சனை; என் அப்பனை இழுக்க உங்களுக்கு எந்த உரிமையும் இல்லை; அதை புரிஞ்சுக்குங்க முதல்லே””

சரி, அப்ப எதற்கு எடுத்தாலும் என்னைப் பற்றி குறை கூறும் போது, என் அம்மாவை இழுக்கிறாயே! அது என்ன நியாயம்?

அதை விடுங்க . ‘எனக்கு இரண்டு லட்சம் வேணும் என்று சொல்லி ஒரு மாதம் ஆகிறது. “”உன் தங்கை கல்யாணத்துக்கு ஏற்பாடு செய்கிறேன்”” என்று சொன்னீர்களே! அது என்னவாம் !?

‘அப்படி வா; கடவுள் உங்களைப் படைக்கும்போது ஒரு சூட்சுமம் வைத்து படைத்து இருப்பார் போல’

அதனால் தான் எதையும் நேர்மறையாக கேட்காமல், எதிர்மறையாக சண்டையிடுகிறீர்கள்!

போதும் உம் சம்பாசணை.என் அப்பாவுக்கு தெரிந்தால் , தூக்குபோட்டு இறந்துவிடுவார்.

அடியேய்! இதிலும் இவ்வளவு வில்லங்கமா? உதவி என்று கேட்டுவிட்டு மிரட்டி பணம் பறிக்கும் வழிப்பறி குடும்பமா ? உங்கள் குடும்பம்! என்று கூறி ரூபாய் 2.00 லட்சத்திற்கான பண வோலையை நீட்டினான்.

இதை முதலில் சொல்லி இருந்தால் இவ்வளவு

சண்டை வந்து இருக்காது.

‘வரட்டும், வரவேண்டும். வாழ்க்கை உன்னோடுதான் என்று வந்தபிறகு அதில் சலிப்பை காண்பது எனக்கு அழகு அல்ல’.

ஏது !? அப்படியே முகம் மலர்ந்தாள்! மலர்கள் வாசத்தை மட்டும் பரப்பவில்லை. நல்ல விடியலையும் அவனுக்கு தந்தது.

இரவுகள் வரை அது தொடரும் என்பதற்கு எந்த உத்தரவாதமும் இல்லை.

இப்படிக்கு உண்மையுடன்

செல்வன் ராஜன்

## வாழ்க்கை என்பது எவ்வளவு தூரம்...

எவ்வளவு தூரம்;
   எவ்வளவு தூரம்;
   எவ்வளவு தூரம்,
   அளக்க முடியவில்லை;
எல்லை இல்லா வாழ்வு;
எதற்கு இப்படி அலைகிறது;
   மனமே பேதம் கொள்ளாதே;
உன் குணம் எனக்கு தெரியும்.
   உறவை , நட்பை , பழக்க,
வழக்கத்தை , மாண்பை, மதிப்பை,
மதி இழக்க செய்ய வல்ல,
ஆற்றல் உனக்கு இருக்கிறது.
   என்ன செய்ய ?
பாவி மனிதர்கள் நாங்கள் !
   படைக்கப்பட்டோம்,
வளர்க்கப்பட்டோம்,
வாழ்வதற்காக வழிகாட்டப்பட்டோம். பார்ப்பவை
எல்லாம் பறக்கின்றன.
நான் மற்றும் ஒன்றை ஆளாய் நிற்கிறேன்.
   என்ன செய்ய......
இனி என்ன செய்ய முடியும்...
என்ன செய்ய வேண்டும்...
சொல்- உன்னிடமே கேட்கிறேன்.
   பிறப்பு என்பது ஜனனம்.
தெரியாமல் நடக்கிறது.
இறப்பு என்பது மரணம்.
தெரிந்தே நடக்கிறது.

நடப்பதை நிறுத்த முடியாது.
முயற்சிக்கிறோம்; முடிந்த வரை போராடுகிறோம்.

பிரிவும் இயற்கையே !!
வாழ்வும் இயற்கையே!!
இறப்பும் இயற்கையே!!
இதில் ஏங்க என்ன இருக்கிறது. சொல்ல எளிதாக இருக்கிறது – நினைத்தால் சுடுகிறது.

எவ்வளவு நாள் இந்த எண்ணங்களை சுமப்பது ?

சுமப்பது சுவை ;
அப்படியானால் எதை சுமப்பது,
எதிர் காலத்தையா ?
நிகழ் காலத்தையா ?
இறந்த காலத்தையா?

சொல் மனமே சொல் .
என் மனசு எனக்கு தெரியவில்லை.
என் இதயம் துடிப்பது எனக்கு உணர்த்துகிறது.

என் துல்லல் தொடர்ந்து இந்த பிரபஞ்சத்தில் இருந்து கொண்டு என்னை ஆட்டி விக்க வேண்டும்.

ஆட்கொள்ள வேண்டும்.

என் ” இதயம்” என் “மனதை” ஆட் கொள்ள வேண்டும்.

இறைவா,
இயற்கையே,
எல்லாம் வல்ல பரம்பொருளே,
வழி செய்,
வழி செய்,
வழி செய்....

வழி செய்வாயாக ..........

# என்னுள் ஒருவன்

என்னுள் ஒருவன் !!!
“பிறப்பின் மேன்மை
பிறர் மதித்து நடத்தல்.
பிறப்பின் உயிர்மெய்
சுயமரியாதை.
பிறப்பின் மகிமை
தன் உணர்வு அடைதல்.
பிறப்பை ஒவ்வொரு நொடியாய் கொண்டாடுவோம்.
கண்டு கொள்வோம்.
வாழ்க வாழ்கவே!”

# ஏன் இந்த கோபம்?

இந்த" கோபம் மட்டும் தான் எனக்கு பாதிப்பை ஏற்படுத்துகிறது. அப்படியானால் கோபத்தில் பல வகைகள் இருக்கின்றனவா என்று ஆராய்ந்தேன்.

ஆம் ! அப்படித்தான் போலும். எப்படி கோபம் இடத்திற்கு , சம்பவத்திற்கு, நிகழ்வுக்கு என மாறுபடும் என்பதை ஆராயத் தொடங்கினேன்.

இடம் , பொருள், ஏவல் என்றார்கள் நம் முன்னோர்கள்.

" இடம்" அறிந்து பேசி, பொருள்பட உரைத்து, வேண்டியதைப் பெற்றுக்கொள்ளும் பண்பு நம் தமிழர் பண்பு !

நம்முடைய கோபம் சம்பவத்தை அடிப்படையாக கொண்டு இருக்கும் பட்சத்தில், அது நம்மை பெரிதும் பாதிக்காது.

அந்த சம்பவத்தை மாற்றி அமைக்க , அல்லது கடந்து நாம் கற்றுக்கொள்ள வேண்டும்.

கொஞ்சம் புத்திசாலித்தனம் மட்டும் இருந்தால் போதுமானது.

அடுத்து நிகழ்வு :-

ரொம்பவும் பொறுமையாகவும், நிதானமாகவும் கையாள
வேண்டும்.

அப்படி செய்யாமல் கொஞ்சம் அவசரப் படும் போது , 'தலை பாய்' க்கு வருவதை 'தலைக்கு' கொண்டு வந்து விடும்.

ஆக ! கோபத்தை எப்படித் தான் கையாள்வது?

'ஆள்வது' என்பது முடியாத காரியம். ஆகவே அதைக் கடக்க வேண்டும்.

அவ்வாறு ‘கடக்க வேண்டும்’ என்றால் ,”மனதை” கொஞ்சம் ஏமாற்றினால் போதும்.

மனதை ஏமாற்றக் கற்றுக்கொள்பவன் இந்த உலகத்தையே ஆள்வான்.

அவன் தன்னைப் போல் பிறரையும் ஏமாற்றக் கற்றுக்கொண்டு பிறகு அந்த “சூட்சமத்தில் ” நின்று , திளைத்து , கடைசியாக நிதானமாக வெளியே வந்து விடுவான்.

உதாரணங்கள் – அரசியல் வாதிகள்.

ஆக நாம் வாழ நம்மை கொஞ்சம் ” அசுவாசப்படுத்திக்” கொள்வோம்.

பிறரைப் பற்றி காலம் நமக்கு புரிய வைக்கும்.

அரசியல் பழக வேண்டும். படிப்பது என்பது “ஏட்டு சுரைக்காய் கறிக்கு உதவாது”.

வாழ்க வளமுடன்-மனமே மார்க்கம்.

நன்றிகள்- என் வாழ்வு ஒரு அரசியல்.

# ஆச்சரியம் ; ஆனால் உண்மை

” இப்பத்தான் உன்னைப் பற்றி பேசிக்கொண்டு. இருந்தோம் ;நீ வந்து விட்டாய் !!உனக்கு100வயது ” இந்த சொல்லாடல் பல முறை நாம் சொல்லி. இருப்போம் ; அல்லது நாம் சொல்லப்பட்டு இருப்போம்- இது எப்படி சாத்தியம்.

இது எல்லாம் எப்படி நடக்குது-எனக்கு தெரியலே !

இதைத்தான் ‘மைண்ட்ரீடிங் ‘என்று சொல்கிறார்கள். இது எல்லோருக்கும் நடக்கும் ஒரு நிகழ்வு.

நாம் ஒருவரை பல முறை சந்திக்காமல் இருக்கலாம். ஒரு சினிமா தியேட்டரிலோ , ஒரு கிளப் மீட்டிங்கிலோ, ஒரு அரசியல் கூட்டத்திலோ, ஒரு முறை சந்தித்த நபரை வெகுநாள் கழித்து சந்திக்கும்போது எங்கேயோ பார்த்து இருக்கோமே இந்த நபரை என்று நமக்கு ஒரு சிந்தனை வரும்.

அதை நாம் சிந்தனையில் வைத்துக்கொள்ளாமல் மேலோட்டமாக விட்டுவிடுவோம்.

ஆனால் நாம் ஒரு விஷயத்திற்காக ஒருவரை சந்திக்க முன்கூட்டியே திட்டமிட்டு அதற்கான ஏற்பாடுகளை செய்து அதில் பயணம் செய்யும்போது இந்த நிகழ்வு நடந்து இருக்கும்.

அவரும் ஏதோ ஒரு காரணமாக அந்த இடத்திற்கு வந்து இருப்பார் :- அது ஒரு பஸ் ஸ்டாப் , ரயில் நிலையம், விமாண நிலையம் ; அல்லது ஒரு கோயில், குளம், டீ கடையாக கூட இருக்கலாம்.

இதற்கு எல்லாம் பதில் தேடும்போது அது ஒன்றை உணர்த்தும்; அது தன்னுணர்வு..

அதை கண்டு கொண்டால் , பறவைப் போல் உல்லாசமாக பறக்கலாம். பறக்கும் போது விதைகளை

தூவி பல விருட்சங்களை உண்டாக்கலாம்.

இவை எல்லாம் தன்னிச்சையாக நடக்கும்போது பிறப்பிற்கும் இறப்பிற்கும் உள்ள இடைவெளி என்பது ஒரு சுவாரஸ்யம் நிறைந்த நித்ய கல்யாணமாக இருக்கும்.

அந்த கல்யாணத்தில் ஆர்ப்பாட்டம் இருக்காது; அமைதி இருக்கும்; ஆனந்தம் கைகூடும். அலைகள் வந்து போகும்; ஆனால் ஆழமான நிசப்தம் உருவாகும்.

அந்த உணர்வு நம்மை படைத்தவன் நமக்கு உணர்த்தும் உண்மை.

இது ஒரு படைப்பாளிக்கு வந்தால் அது நாவல்; புதினம்; கவிதை.

செயலில் வெளிப்பட்டால் – புரட்சி;

அமைதியாக அமைந்தால் அது ஆன்மீகம் !!!

# "எல்லாம் நம் செயல் "

சுரேஷ் நடந்து கொண்டே இருந்தான். நடப்பது அவனுக்கு பிடிக்கும் என்பதற்காக அல்ல, நடப்பது ஒரு கடமையாகப் பட்டது. அதுவும் குளிப்பது, உண்பது, வேலைக்கு செல்வது, மாலை வருவது, மீண்டும் உண்பது, உறங்குவது போல என்று வாடிக்கையாகி விட்டது.

ஐராதீஸ்வரர் (குடந்தை-தாராசுரம்) கோயிலை 6 முறை சுற்றுவது அவனுக்கு அவனே இட்டுக் கொண்ட கட்டளை.

”இன்று சற்று மயக்கம் வருகிறதே” என்ற எண்ணம் உதிக்க, சற்றே இளைப்பாற உற்காந்தான்.

‘சிந்தனை சிறை கைதியாக அமைதியாக இளைப்பாற முடியவில்லை. உடம்புக்கு

சுரேஷ் நடந்து கொண்டே இருந்தான். நடப்பது அவனுக்கு பிடிக்கும் என்பதற்காக அல்ல, நடப்பது ஒரு கடமையாகப் பட்டது. அதுவும் குளிப்பது, உண்பது, வேலைக்கு செல்வது, மாலை வருவது, மீண்டும் உண்பது, உறங்குவது போல என்று வாடிக்கையாகி விட்டது.

”இன்று சற்று மயக்கம் வருகிறதே” என்ற எண்ணம் உதிக்க, சற்றே இளைப்பாற உற்காந்தான்.

‘சிந்தனை சிறை கைதியாக அமைதியாக இளைப்பாற முடியவில்லை. உடம்புக்கு ஏதாவது இருக்குமோ, இன்றே மாலை ஆபிஸ் முடிந்தவுடன் மருத்துவரிடம் காண்பிக்கே வேண்டும்’.

சே, ஒரு வேலை ஒழுங்காக முடிக்க முடியவில்லை. என்னுடைய அடுத்த நகர்வை இந்த ஓய்வு கெடுத்துவிட்டது.

இப்படித்தான் எந்தே வேலை எடுத்துக் கொண்டாலும் ஒரு தடை என்னை வாட்டுகிறது- வாட்டுவது என்பதை விட வதைக்கிறது என்றுதான் சொல்லவேண்டும்.

“அவன் அவன் தன் காரியத்தை எப்ப படி சுலபமாக செய்து கொண்டு போகிறான். எனக்கு ‘வந்ததாலும்’ ‘வாய்த்ததாலும் ‘ எந்த சந்தோஷமும் இல்லை.

முயற்சி செய்து வீட்டில் எல்லோரையும் கரிசனத்துடன், அக்கறையுடன் செயல்பட்டு அமைதியாக வாழ முனைகிறேன்.”

ஏனே? கடவுள் எனக்கு அந்த பாக்கியத்தை அருளவில்லை.

எதற்கு எடுத்தாலும் குறைகாணும் – மனைவி; சந்தேகப்படும் மேனேஜர்; ஒத்துஉழைக்காத சக ஊழியர்கள்; ஆக நிம்மதிக்காக நடந்தால் என் எண்ணம் என்னை வாட்டுகிறது.

கடவுளே !! உன்னிடம் சரணாகதி அடைந்துவிடுகிறேன் ;என்னை எப்படியாவது காப்பாற்று!

கும்பிட்டுக்கொண்டே வெளி பிரகாரத்தில் தன்னை மறந்து தியானித்துக்கொண்டு நின்றான்.

தன்னை மறக்க நினைத் போது, உடல் உதரியது; தலையை வேகமாக ஆட்டினான்.

அப்போதுதான் உணர்ந்தான்-“காக்க தலையில் “மூச்சா ” போய் இருப்பது.

ஆமாம். தம் “இருந்தலை” உணராமல் உணர்த்தி சென்ற காக்கையை அந்நாந்து பார்த்தான்.

பார்க்கத்தான் முடியும்.

பரவசம் அடைய பழக வேண்டும்.

பழக்கப் பட வேண்டும்.

எல்லாம் நம் செயல்!!!!!????

# விளைவை நோக்கிய பயணம் தொடரும் ......

ஆன்மீகம் அழைக்கிறது !!!

கும்பகோணம் ஊராட்சி ஒன்றிய தொடக்கப் பள்ளி , தாராசுரம் அருகே , தாராசுரம் வழி பட்டீஸ்வரம் கோயிலுக்கு போகும் முகப்பில் ஐராதீஸ்வரர் கோயில் பின்புறம் அமைந்து உள்ளது அருள்மிகு பத்ர காளி அம்மன் உடனுறை அருள்மிகு வீர பத்திரர் திருக்கோயில் .

இந்த திருத்தளம் குடந்தையில் இருந்து ஒரு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்து உள்ளது .

நான் நடை பழக்கமாக தினமும் ஐரா தீஸ்வரர் கோயிலுக்கு செல்லுவது வழக்கம் , அவ்வாறு செல்லும் பொழுது இந்த கோயிலை வெளியில் இருந்து பார்த்து இருக்கிறேன் .

கோயில் பழமையானது என்பதற்கு பல அறிகுறிகள் தென்பட்டன.

பாழ் அடைந்த கோபுரம் , ஆனால் சீரடைந்து வருகிறது. இதற்கு காரண கார்த்த அங்கு வசிக்கும் ஒரு பக்தர் .

அவ்வாறாக நான் , ஒரு நாள் காலை சென்ற போது , கோயிலை தரிசிக்கும் வாய்ப்பு கிட்டியது .

பூசாரி அவர் வேலையை பார்த்துக் கொண்டு இருந்தார் . நான் கோயில் மூலவரை வணங்கினேன் . பிறகு பின்புறம் சென்ற போது , என்னை கூப்பிட்டு , அங்கே இருப்பது ஒட்டக்கூத்தர் சமாதி என்றும் , அவர் அங்கே சித்தமாகி இருக்கிறார் என்று கூறினார் .

சித்தர் பீடம் மூலஸ்தானத்தில் இருந்து சற்று தெற்கே அமைந்து உள்ளது. சித்தர் பீடத்தை சுற்றி புது சமாதி

அமைத்து இருந்தார்கள் .

கவிச்சக்ரவர்தி , இங்கே அமர்ந்து பல பாடல்களை பாடி இருக்கிறார். அதில் இந்த ஊரைப் பற்றிய குறிப்புகளும் பல உள .

இதில் உள்ள உண்மையை என்னால் உணர முடிந்தது . கால காலமாக தமிழை வளர்த்த புலவர்களுக்கு பொற்குவியலை அரச மாமன்னர்கள் கொடையாக கொடுத்ததும் , மேலும் அருள் வாக்கு பெற்றதும் , அந்த சிந்தனையில் கிடைத்த கருவூலங்கள் நமக்கு புதுப் புது அர்த்தங்களையும் , வாழ்வியலையும் என்றென்றும் பறை சாற்றிக் கொண்டு இருக்கின்றன.

கவியை வணங்கி சற்று முன்னோக்கி நடந்தேன் . அங்கே வடக்கே ஒரு உயர்ந்த புற்றும் , அதைச் சுற்றி ஒரு வளைவான பிரகாரமும் என்னை வரவேற்றன .

சுற்றி வந்து அமர்ந்தேன் . தியாணம் செய்தேன்.

கடைசியாக பூசாரி நீலகண்டனிடம் ( 8680828922) உரையாடினேன் .

அது அகஸ்தியரின் சிஸ்யர் ஸ்ரீ ரெவன சித்தர் அடக்க மாகிய இடம் என்று கூறினார் .

பிரமிப்புடன் சென்ற எனக்கு பல கேள்விகள் எழுந்தன . எல்லாவற்றிற்கும் ஆன பதிலை அவரிடன் தேடிக் கொண்டேன்.

இந்த கோயிலைப் பற்றி என்ன எழுதுவது என்ற எண்ணம் உதித்த பொழுது என்னிடம் எந்த குறிப்பேடும் இல்லை.

இப்படி சொல்ல எனக்கு எந்த அதிகாரமும் இல்லை என்பதற்கு பிறகு நடந்த ஒரு சம்பவம் .

பூசாரியை சந்தித்தேன் . உரையாடினேன் . விடை பெற்றேன் . அவர் அங்கு உள்ள கலசத்கிற்கு வர்ணம் இட பணம் தேவைப் படுகிறது என்று கூறினார் . என் மனதில் அதை உள் வாங்கிக் கொண்டேன் .

எப்படி என் எண்ணங்களை பகிர்வது என்று நினைக்கும் பொழுது என் பார்வை விரிய வில்லை .

ஆனால் அந்த எண்ணம் மட்டும் என் இதயத்தை சற்று

உருத்திக் கொண்டே இருந்தது என்று தான் சொல்ல வேண்டும் .

நான் பார்த்தேன் , ஆனால் புரிதல் இல்லை . புரிதலுக்கு தேடுதல் அவசியம் என்பது மட்டும் என் எண்ண ஓட்டமாக இருந்தது.

ஓட்டத்தை முன் நிறுத்தினேன் . எண்ணங்கள் குவியலாகின.

குவியலை சரி செய்தேன் . சரி செய்ததின் விளைவு நான் உங்களிடம் பகிர்ந்து கொண்டு இருக்கிறேன் .

விளைவை நோக்கிய பயணம் தொடரும் ......

# அடி , அடியாய் -கவிதை நேரம்

“அடி , அடியாய் ”
காட்சியின் கோலங்கள்
குழாய் அடியில் ,
குடங்கல் காத்திருக்கின்றன;
தண்ணீர் தாமதம் !
**********************

அனுபவம் கடவுள்
உணர்ந்தது இன்று ;
உணர்ந்த பின் நேற்று;
உணர துடிப்பது நாளை !!
****************

கார்மேகங்களின் பட்டின பிரவேசம்
வாகனங்கள் அணிவகுத்து காத்து இருக்கின்றன;
வானத்தை நோக்கி,
மேம் பாலத்தில் ...........
*************

வாழ்க்கை ஒரு உண்மை சம்பவம்.
வாழவே பிறந்தோம் !!!!
வாழ்ந்தே காட்டுவோம் ???
கேள்விகளை வேள்விகளாக ஆக்குவோம் ;
ஆச்சிரியங்களை அனுபவங்களாகபெறுவோம்.
அனுபவத்தை ஆனந்தமாக்குவோம்.
******************

# "வாழ்ந்தே காட்டுவோம்"

இந்த உலகத்தில் எதுவும் ஒசியாகக் கிடைக்காது. அப்படியே அது கிடைத்தாலும் அது அனுதாபத்தினால் விளைந்த அழுக்கே !

உனக்கு எங்களை " தன் பெற்றோர்கள்" என்று சொல்லிக் கொள்வதில் பெரும் சங்கடம் இருப்பதாக உணர்கிறோம்.

நாங்கள் உன்னை வளர்த்து, படிக்க வைத்து ஆளாக்கியதை 'பெருமையாகச்' சொல்ல இந்த கடிதத்தை எழுதவில்லை.

மாறாக ஒன்றை மட்டும் சொல்லிக் கொள்ள விரும்புகிறோம்.

' கோதுமை மணி மண்ணில் விழுந்து மடியாவிட்டால் அது அப்படியே இருக்கும். அது மடிந்தால் தான் மிகுந்த விளைச்சலை அளிக்கும் ' என உறுதியாக உங்களுக்குச் சொல்கிறேன்.

(யோவான் 12.24)

எங்களுடையது: 1 ஏக்கர் நிலம்-3 லட்சம்; வைப்புத் தொகை – 5 லட்சம்; வீடு மதிப்பு – 5 லட்சம்- எங்கள் உழைப்பால் சேர்ந்த சொத்துக்கள்.

இதில் எங்கள் வீட்டை " விவசாய ஆலோசனைக் கூடமாக " மாற்றி உள்ளோம். வைப்புத் தொகையில் இருந்து வரும் விட்டியைகொண்டு இந்த அமைப்பு செயல்படும். எங்கள் நிலத்தில் 3 போகமும் விளைவதற்கான முயற்சிகள் மேற்க் கொள்ளப்படும்.

எங்களுடைய ஆசை, எங்களுடைய கிராமத்தை "சுய நிறைவு பெற்ற தன்னிறைவு கிராமமாக" மாற்ற வேண்டும் என்ற நோக்கமே !!

ஆக, உன் கடிதம் கிடைத்தது. படித்தோம். அறிந்தோம்.

உன் விருப்பப்படி நீ அங்கேயே கல்யாணம் செய்து கொண்டு முறைப்படி வாழ எங்களுடைய மனமார்ந்த வாழ்த்துக்கள் .

ஒரு ஊர் அழகாக இருக்கிறது என்றால், அந்த ஊரில் சாக்கடை அழகாக ஓடுகிறது என்று அர்த்தம்.

இறைவன் எங்களை நன்றாக
படைத்தனன் – பாட்டாளிகளை, தொழிலாளர்களை, கூலி வேலை செய்வோர்களை , விளிம்புநிலை மக்களை – செயல்படுத்த, ஊக்கப்படுத்த.....

உண்மைகளை உறக்கச் சொல்ல,
உறைவிடத்தில் இருந்து

இரா செல்வராஜ்

குடந்தை

# தனிமை X தன்னுணர்வு

தனிமை என்பது தவிர்க்க முடியாத ஒன்று. பிறப்பில் இருந்து இறப்பு வரை நம்மிடையே வரும் ஒரு உலகம்- தனிமை.

ஒரு கூட்டத்தில் , குடும்ப விழாவில், அலுவலகத்தில் , பள்ளிப் பருவத்தில் என பல வேறு சந்தர்பங்களில் நாம் நம்மை கடக்க முடியாமல் தனிமையில் வாடி இருப்போம்.

இதை யாரும் மறுக்கவோ, மறைக்கவோ முடியாது.

நம் வலி, நம் குடும்பம், நம் சந்தோஷம் , நம் வாழ்வு என்று இருப்பவர்களுக்கு இந்த வலி “அதிகம்” வரும்.

இதுவே ஒரு சந்நியாசி யின் நிலையில் இருந்து பார்த்தால், அவர் உலகமே இதற்கு எதிர்மறையாக இருக்கும்.

காரணம் ; அவர்தம் தன்னுணர்வு

நாம் தன் உணர்வு கொள்ளும்போது நம்மிடையே

ஒரு மீட்சி,

ஒரு அறம்,

ஒரு முழுமை ;

தோன்றுவதை உணரலாம்.

அதுவே பரிபூரண வாழ்வு;

இதைத்தான் “பாகவதம்” கூறுவதாக “ஜெய மோகன்” – தமிழில் இன்றைய இலக்கிய வட்டாரங்களில் அதிகம் பேசப்படும் எழுத்தாளர்- தன் “Magnum opus ” என்று அறியப்படும் “வெண்முரசில் ” கூறுகிறார்.

எப்போது உங்கள் தனிமை தன்னிறைவு பெறும்.

Eg. Mahatma Gandhi,

சராசரி இந்தியனின் அடையாளமாக இருந்தார்-Simple

Attire – ஒரு கோமணத் துண்டு.

அவர் கூறுகிறார்: ” நான் காட்டில் இருந்து கொண்டு ‘ஜிலேப்பிக்கு ‘
ஆசைப்பட்டது இல்லை. ஜலேப்பிக் கடையில் இருந்து கொண்டு ஜிலேப்பியை ஜிலேப்பியாக பார்ப்பவன்.

சாவி – எழுத்தாளர்-நவகாளியாத்திரை.

அவ்வாறாக தன் உணர்வு கொள்பவர்களுக்கு,

குடும்பத்தில்,
வாழ்க்கையில்,
சமூகத்தில்,
அலுவலகத்தில்,
நண்பர்கள், உறவுகள் மற்றும் இன்ன பிற ஜீவன்களிடமும் ஒரு “உன்னத உணர்வு மூலம் உறவு” கொண்டு வாழ்வாங்கு வாழ்வார்கள்.

“முதுமை என்ற தனிமை ” வரை காத்துக் கிடக்கத் தேவை இல்லை.

இரண்டு உதாரணங்கள்.

முதுமையிலும் இளம் துடிப்புடன் செயல் பட்ட

1.மகாத்மா காந்தி;

இளமையிலேயே தன்னை மறந்து சமூக மேம்பாட்டிற்காக காலத்தை வென்ற

2. மகாகவி பாரதி.

இதே நம் மகாகவி சொல்கிறார்.

“காக்கை குருவி எங்கள் ஜாதி-நீள
கடலும் , மலையும் எங்கள் கூட்டம்,
நோக்கம் திசையெல்லாம் நாமன்றி வேறில்லை
நோக்க நோக்கக் களி யாட்டாம்”.

கடலையும், மலையையும் நம் இனமாகவே பார்த்தார். பரவசம் அடைந்தார்.

இதுவே இன்று ” Global warming” என்ற பட்டத்துடன் ” Green-Revolution” என்ற அடைச் சொல்லுடன் ஒரு சொல்லாடலாகப்பட்டு தொடர்ந்து பேசப்பட்டு வருகிறது.

பாரதி போன்ற ஒரு கவிஞன் இனி பிறக்கப் போவது

இல்லை. ஜாதி, மதம் ,இனம் ,மொழி கடந்து எல்லோரையும் நேசித்த மகாத்மாவாக பாரதி வாழ்ந்தார்.

வாழ்க்கையில் , சிந்தனையில் காந்தியத்தையும், பாரதியையும் தன் உணர்வாகக் கொண்டு செய்கிற வேலையில் முழுமை பெறுவோம்.

தனிமை என்று தனித்து ஒன்று இல்ல.

அது ஒரு மன நிலை.

இரா.செ.

# இலக்கியம் "சோறு" போடுமா?

யார் சென்னது?
   யாரும் இல்லை; அதுவே யாரும் ஆகி,
   ஆகச் சிறந்த நானாகி,
   என்னுள் உறைந்து; உண்டு;
   உறங்கி,உளவி,வினவி,
   கற்று, கண்டதை அறிந்து,
   அறிதலில் தெளிந்து,
தெளிந்ததில் உணர்ந்து,
உணர்ந்ததில் மிதந்து,
மிதந்ததில் சுகந்து,
   சுகப்பதில் கரைந்து, கலைத்து,
காண்பவை எல்லாம் காட்சிகள் ஆகி,
காட்சிகளே காலப் போக்கில்,
மறைந்து, மறைந்து,மறைந்து,
   உலவியில் கற்று,
உண்மை உணர்ந்து,
உணர்வில் இருந்து,
மீண்டும், மீண்டும், மீண்டும்,
   பழகி,பழகி,பழகி,
பழகிக்கத்தில் உண்டான சுவை,
இலக்கியம் என்று உணரும் போது,
   நான் அவனே !!!!
   அவன் எவனோ என்று இல்லாமல்;
என்னுள் கரைந்த கால வெள்ளம்,
   இலக்கியம்.
   சோறு என்ற இலக்கியத்தில்,
பிச்சைக்கு இடமில்லை,
எடுக்க,எடுக்க குறைவில்லாமல்,

கொடுத்துக்கொண்டே இருக்கும்,
அமுத சுரபி.
அப்படியே இல்லாமல்,
எப்படியும் இல்லாமல்,
இப்படித்தான் என்று சொல்லலாம்;
கொண்றவற்றை எல்லாம்;
கொடுக்கும் பேராற்றல் என்கிற
பரம்பொருள் இலக்கியம் என்று
கொள்க.
வாழ்க என்று வாழ்த நான் என்ன பரம்பொருளா ,
அந்த பரம்பொருளும்
இலக்கியமே என்று என் உள்ளம்
உரைக்கிறது.

# வாழ நினைத்தால் வாழலாம்

பிறந்ததும் பறக்கின்றன ,,
வாழ்கையை கொண்டாட. ,,,,
- ஈசல்கள் ..

Flies

# என் நினைவுகள்....

‘குடியை’ மறந்தோம்-மனிதம் – படிப்பு என்கிற மமதையில் மதம்பிடித்து ஆடுகிறது.

‘என்ன ஜெய்சங்கர் , நல்லா இருக்கியா, தீபாவளி எப்படி போனிச்சு ? நீ மட்டும்தான் அடிக்கடி என்னோடு பேசிக்கொண்டு இருக்கிறே? நமக்கு இப்போ 62 வயது ஆகுது. ரிடெய்ர் ஆகி ‘3 ‘ வருடங்கள் முடிந்துவிட்டது.பேரன்கள் பார்த்துவிட்டோம்’ -வந்த காலுக்கு பதில் பேச ஆரம்பித்தேன்.

“என்னதான் இருந்தாலும், என்னாலா அந்த முதல் வகுப்பு-9 வது சேரும்போது ; ஆசிரியர் எல்லோரையும் ABCD எழுதச் சொன்னது” – மறக்கமுடியாது.

அப்பா! இப்ப நினைத்தாலும் மனசு பகீர்ங்கிறது. ஏன்னா நாங்க குடந்தையில் இருந்து 1970ல் சென்னை வந்தோம். அப்பாவிற்கு தணிக்கை பிரிவில் வேலை.

நான் 5வது முதல் 8வது வரை அந்த கருணீகர் தெரு , வேளாச்சேரியில் படித்தேன்.

படித்தேன் என்பதைவிட விளையாடினேன் என்பதுதான் எனக்கு இன்றும் நினைவில் இருக்கிறது.

அந்த எட்வின், பஷீர், பிரபாகர், பீத்தாம்குமார் என பல நண்பர்கள். அப்போ தமிழ் ஆசிரியர் சொன்னார் :- இங்க தமிழ் பசங்களை விட கன்னட, தெலுங்கு பிள்ளைகள் தமிழில் அதிகமார்க் எடுக்குது என்று .

அன்று அது உரைக்கவில்லை. எல்லோரும் நண்பர்கள். நண்பர்கள் இடையே என்ன பொறாமை என்ற பெருந்தன்மை.

இப்படியாக, கோலிகுண்டு, ஐஸ் பாய், பம்பரம் எனபறந்து பறந்து விளையாடியது....அந்த வேளாச்சேரி

ஏரியில் கோடையில் விளையாடிய கிரிக்கெட்-நான் ஒரு off ஸ்பின்னர் மற்றும் opening பேட்ஸ்மென்.

தெரு போட்டிகள் வெகு ஜோராக நடக்கும். ஆக எனக்கு குடந்தையும் , சென்னையும் கிராமங்களாகவே தெரிந்தது.

ஏதே , நீ அன்று பக்கத்தில் இருந்ததால், உன்னை வைத்து ஒப்பேத்தினேன் – உனக்கு நினைவுக்கு வரவில்லை போலும் அந்த ABCD ....

அது சரி , மேலும் ஒரு சம்பவம் :- அந்த கால கட்டத்தில் நான் கால் ஆண்டு தேர்வில் ஆங்கிலத்தில் 13 மார்க் எடுத்தது. அதற்கு என் தகப்பனார் ‘மாடு மேய்க கூட நீ லாயக்கு இல்லை’ என்று திட்டியது.

நினைவு இருக்கிறதா ? நீயும் தான் அப்போது அருகில் இருந்தாய் !!???

என்னால் இன்றும் மறக்க முடிய வில்லை.

என்ன அதையே ‘சவாலாக’
கொண்டு படித்து பட்டம் பெற்று வங்கி வேலையில் தேர்வு பெற்று மேலாளராகவும் உயர்ந்து ஓய்வும் பெற்றுவிட்டேன்.

“அந்த நெருடல் ” என்னை உயர்த்தியது. உண்மை.

ஆனால் , இன்று சிந்தித்துப் பார்க்கிறேன்.

“அந்த வார்த்தை “- ‘மாடு மேய்ப்பது’ அவ்வளவு கேவலமான தொழிலா?

அப்படி குடிகளாக மாடு மேய்க்காவிட்டால் நாம் வளர்ந்து இருப்போமா இப்போது.

நினைவுகள் ஓட .... வேறு விஷயத்தை பேசி நண்பனிடம் இருந்து விடைபெற்றேன்.

குறிப்பு :- எங்களுக்கு ‘கார்காத்த ‘ என்ற குலப் பெயர் உண்டு. ஆக குடிகளை மறந்தோம் -‘மறந்தார்’
என் தகப்பனார் என்று தான் சொல்லவேண்டும்.

சிறப்பு :- நாங்கள் இன்று இருக்கும் வீதி ‘நாணயக்காரத் தெரு’ என்று அழைக்கப்படுகிறது.

இதன் சிறப்பு , அந்த காலத்தில் சோழர்களுக்கு “நாணயங்களை” செய்து தந்த வணிகர்கள் எங்கள் குல

மக்கள்.

மேலும் ஒரு சிறப்பு :- இங்கு அமைந்து உள்ள “சிவ குருநாதன் செந்தமிழ் நூல் நிலையம்” கடந்த 50 வருடங்களாக நல்ல முறையில் நடத்தப்பட்டு வருகிறது. 50000 க்கும் மேற்பட்ட இலக்கிய, இலக்கண நூல்கள் உள்ளன. அன்பர்கள் பயன் படுத்திக்கொள்க.

## "யார் அவர்" ?

எங்கே பிறந்தார் ? எங்கிருந்து வந்தார் ; எதற்காக வந்தார் !?

ஒன்றும் புரியவில்லை ;அல்லது அதைப் புரிந்து கொள்வதில் யாருக்கும் விருப்பம் இல்லை.

யார் இவர் ? எதற்காக இந்த பிழைப்பு ? ஏன் அலைகிறார் ; அல்லது அலைக் கலைக்கப்படுகிறார்.

விடை இல்லை ; இல்லவே இல்லை ,அதை அறிந்து கொள்வதில் என்ன சுவாரஸ்யம் இருக்கிறது.

அவர் என்ன ஒருபொருளா? அவர் ஒரு பொருட்டே இல்லை.

அவர் ஒரு பொருளாக பார்க்கப்பட்டு இருப்பார் – பெண்ணாக, அதுவும் கொஞ்சம் இளமையுடன் கூடிய அழகுடன் இருந்து இருந்தால் என்று தோன்றுகிறது- இரக்கப்படுவதற்கும் அல்லது இறை தேடி அலைவதற்கும்.

50 க்கு மேல் தான் அவரது வயது என்று ஒரு தோராயமான கணிப்பு . கரியநிறம். கிளிந்த சட்டை, லொட லொட பாண்ட் .

அவரை அவன் என்று யாரும் சொல்லாதற்கு காரணம் அவர் ஒருவிதத்தில் கண்ணியத்துடன் தான் இருக்கிறார் என்று சொல்லவேண்டும்.

யாரும் இங்கே அவரை நாடேடி , அனாதை அல்லது பிச்சைக்காரன் என்று சொல்லாதது வியப்புக்குரியதே !

யாரிடமும் யாசிப்பதும் இல்லை , யாசித்தவரைப் பற்றி யோசிப்பது இல்லை இந்த “யாரோவுக்கு” .

அவர் கண்களில் ஏக்கமோ ; இருக்கமோ காணவில்லை.

ஒரு நாள் :-

காலை சுமாராக 6.30 மணி இருக்கும், எல்லோருக்குமாக பகல் விடிந்தது . எங்களுடைய காலனியில் “”நான்கு”” வீடுகள். எல்லோரும் அவர் அவர் தம் வேலையில் ஈடுபட்டுக்கொண்டு இருக்கிறோம்.

8.30க்குள் எங்களுடைய எல்லா தேவைகளும் முடிந்துவிட்டதாகவே நினைக்கிறேன்.

ஆம்! அவர் மட்டும் வெளியே இருந்து இரும்பு கதவை திறந்து ஓடிவருகிறார்.

தூய்மை பணியாளர்களுக்கு எடுத்துச் செல்ல Bucket எல்லாம் நிறம்பி வழிகிறது. மழை தொடர்ந்து பெய்வதால் எல்லாம் கலந்த கலவை அது.

அவர்கள் ஒவ்வொன்றாக எடுத்து எல்லாவற்றையும் வண்டியில் சேர்த்துக்கொண்டு இருக்கிறார்கள்.

ஒரு சில நொடியில் அந்தக் கழிவை ஒரு கை ஏந்துகிறது. அதைப் பிழிகிறது. அந்த ஈரத்தை உறிஞ்சுகிறது.

எல்லோரும் பார்க்கிறோம். அவர் மேலும் ஒரு Bucket ல் உள்ள மிஞ்சிய நிரை குடிக் கிறார்.

போ! போ! போ! என்று போர் குறல்கள். மழையில் தன் கால் சட்டையை சரி செய்து கொண்டு சத்தம் இல்லாமல் தன் தேவையை பூர்த்தி செய்து கொண்டு தன் வழிசெல்கிறார்.

கூடவே இருந்த எனக்கு ஒன்றும் புரியவில்லை . புரிவதற்கு எனக்கு அனுபவம் இல்லை.

நானும் ஒருநாள் துறத்தப்படுவேன். அப்போது எனக்கு அவமானம் இருக்காது. மாலைகளும் அழுகைகளும் ஒன்றுசேர்ந்தாலும் அதைப் பொருட்படுத்த என் ஜீவன் அனுமதிக்காது.

அந்த அனுமதியை இப்போதே நிராகரிக்கும் இந்த “”அவர்”” ஒரு விதத்தில் சித்தரே!!!

நான் என்கிற

Raman Selvaraj

# பிறப்பிற்கும் எல்லா உயிர்க்கும் !!

பிறப்பிற்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா
செய்தொழில் காண்பது அறிவு.

எனது விவகாரங்களுக்கான காரணங்களைக் கண்டுபிடிக்காமல் நான் இந்த உலகில் வாழ விரும்பும் ஒரு இயற்கை காதலன்.

“”தற்போது இருப்பது “” :-இன்றியமையாதது என்ற காரணத்திற்காக மட்டுமே நான் இருக்கிறேன்.

இந்த உலகம் இப்போது பேராசையால் சூழப்பட்டுள்ளது .

பணத்திற்காக ஆபத் பாங்கானாக இருக்கும் மரங்கள் புறக்கணிப்பது எவ்வளது பெரிய கேடு என்பதை போன்ற செய்திகளை வீரியம் மற்றும் உயிர்ச்சக்தியுடன் பரப்ப நான் கூக்குரல் இட விளைகிறேன் .

நீங்கள் வாழ்க்கையில் மனநிறைவுடன் நிறைந்திருப்பதை நான் காண வேண்டும்.
சரி. நம்மிடம் உள்ளவற்றில் நாம் திருப்தி அடைந்தால் உலக வளர்ச்சியும் மாற்றமும் நின்றுவிடும் என்று சிலர் வாதிடுகின்றனர்.

அதல்ல;எனது கூற்று . மிக எளிதானது.

சமுதாயத்தில் நாம் மதிப்புமிக்க முறையை ஊக்குவிக்க வேண்டும், அதற்காக நம் முன்னோர்கள் வாழ்ந்த வழியை நாம் படிக்க வேண்டும், மேலும் உலகை “”வாழச் சிறந்த “” ஒரு இடமாக மாற்ற நவீன விஞ்ஞான எண்ணங்களை அவற்றில் நாம் பதித்துச் செல்ல வேண்டும்.

அந்த ஒழுங்கு நடக்க, நாம் ஒருவருக்கொருவர் மரியாதை செலுத்த வேண்டும்.

எல்லா உயிர்களுக்குமான இந்த உலகில் “செய்யும்

தொழிலே” தெய்வம்.எந்த வேலையும் இயற்கையில் அர்த்தமற்றது அல்ல.

ஒவ்வொரு தாயும் தன் குழந்தையை அன்புடனும் இரக்கத்துடனும் இருப்பாள் தாய்.

“இயற்கையும்” நமக்கு மலைகள், ஆறுகள், ஏரிகள், காடுகள், மரங்கள், அவற்றில் விலங்குகள், பூச்சிகள், பறவைகள், ஊர்வன போன்றவற்றை வழங்கி நம்மை பாதுகாக்கிறது.

இயற்கை சுற்றுச்சூழலைக் கட்டுக்குள் வைத்திருக்க காடுகளை நமக்கு தானமாக அளித்து காக்கிறது.

இதை ஏழை குடிமக்களோ அல்லது நெட்டிசன்களோ கூட புரிந்து கொள்ளவில்லை.

நம் பேராசை என்ற சாத்தானுக்காக ஒவ்வொரு இடத்திலும் அழிவுகள், சண்டைகள் போன்றவற்றை ஏற்படுத்துகிறோம்.

இப்படி நாம் செய்வதை பழிவாங்கலுடன் மீண்டும் மீண்டும் செய்து கொண்டு இருந்தால், பின்னர் ‘நமது நாளை’ பற்றி கனவு பகடித்தனமானது.
இயற்கை ஒரு அழிவை கையில் எடுக்கும்.

புரிந்து கொள்வோம்.

மனிதகுலத்தின் நல்வாழ்வுக்காக அனைத்து நதிகளையும் ஒன்றிணைக்கவும்,இயற்கை வருத்தப்படாமல் இருக்க எல்லாவற்றையும் சிதைக்காமலும் நம்பிக்கையுடன் செயல் பட வேண்டிய தருணம் இது.

இருப்பு கொள்ளாமல் எழுக !!

செயல் படுக !!!

பிறப்பிற்கும் எல்லா உயிர்க்கும் !!

# உலக நீதி-நியதியா?

‘ஏம்பா ! நேசனல் ஜியோகிராபிக் சேனலில் ஒரு பெரிய எருமை மாடு, அதை 10 சிங்கங்கள் போராடி உண்ணுகிறதே? இதைப் பார்க்கும் போது பயம்மா இருக்கிறது -சிங்கம் ரொம்ப மோசம்பா !? சரிதானே’

ஏழு வயது பையன் கேள்விக்கு பதில் சொல்லும் நிர்ப்பந்தத்தில் இருந்தேன்.

அதற்காக ”யூ டியூப் ” சேனலில்

‘prey vs Predator ‘ ஐ search செய்து எடுத்து என் மகனை முழுவதுமாக பார்க்கச் சொன்னேன்.

அதில் அங்குளம் அங்குளமாக ஆங்கிலத்தில் சதுப்புநிலம், மழை வருகை, அடர்ந்த புல் வெளிகள், பசுமையின் வரவு, எருமைகளின் அணி வகுப்பு, அவைகளின் மேய்தல் என பின்னோட்டமாக தமிழில் ஒலி நாட ஓடிக்கொண்டு இருந்தது.

திடிரெண்டு ஒரு பீடுகை, எறுமைகளின் பதற்றம் ,திக்குத் தெரியாமல் சிதறிய காட்சிகள் என்று ஓடிக்கொண்டு இருந்தது.

அதில் ஒரு எருமை தனியாக மாட்டிக்கொள்ள, அதனை மற்ற சிங்கங்கக் கூட்டம் உண்டு உணவாவாக கொண்டது.

என் கேள்விக்கு இப்போது என் மகன் பதில் கூற ஆரம்பித்தான்,

சிங்கம் எத்தனை- 7 to 10.

எருமை 40 to 50,

அப்போ எது ஜெயிக்கும்;

எருமை – என் ஜெயிக்கவில்லை?

அது ஒடுகிறது ; பயப்படுகிறது.

எதற்காக – உயிருக்காக,

ஏன் பயப்பட வேண்டும்?

சிங்கத்தின் பற்கள் ‘கூர்மையாக இருக்கும்’- கிளித்துவிடும்.

அப்படியா ? எருமைக்கு ஒன்றும் இல்லையா?

என்ன இல்லை: இதோ பார்!

கூர்மையான கொம்புகள், முட்டி உதைத்தால் தாங்கக் கூடிய பரந்த நெற்றிகள்;

இருந்தாலும் 5 ல் 1 முறை சிங்கம் ஜெயிக்கிறது.

அப்படி ஜெயிக்கவில்லை என்றால் , சிங்கம் இறந்துவிடும். இல்லாமலே போய்விடும்.

அய்யோ பாவம் சிங்கம் !

ஆக அது உணவாகச் சாப்பிடுகிறது. “வேட்டை” என்பது விளையாட்டு அல்ல, அப்படியா ! சிந்தித்தான் – என் பையன்.

இது இயற்கையின் நீதி.

‘எருமைகள் ஒன்றாக மேயும்; அதைப் பிரித்து பந்தாட சிங்கம் சூழ்ச்சி செய்யும்’.

“சூழ்ச்சி சில சமயம் பலிக்கும்.”இப்படியாக நான் சொல்லிக் கொண்டு போக,

எதிரே , News7ல் ரஷ்ய உக்ரேன் போரில் இறந்தவர்களின் சடலங்கள் தெரு வீதியில் கேட்பார் அற்று கிடப்பதையும் பார்த்தான்.

அப்ப இது :-

மனிதர்கள் , விசித்திரமானவர்கள்; இயற்கையை மீறுபவர்கள். மீறித்தான் பார்ப்போம் என்று சூழ் உரைப்பவர்கள்.

இப்படித்தான் அரசர்கள், அரசுகள் தங்களை சிங்கங்களாக நினைத்து மக்களை ஆளுகின்றனர்.

அய்யோ பாவம் என்றான் என் பையன்- ஆமாம் என்றேன் நான்.

அடுத்து வருவது

சீன- தைவான் – போர் மேகம்.

“கட் “செய்தேன் நான்.

# "மனிதம் வளர தமிழைக்காப்போம்"

சுயநலம் : என்னுல் இருக்கும் ” சுயம்” தெரிகிறவரையில்.....

பொதுநலம்: சமுதாயம் என்னை பிரதிநிதியாக பார்க்க வைக்கிறது.

பணம்: வாழ வழி செய்யும்; வாழ விடாமலும் தடுக்கும்.

புகழ்: ஏங்குகிற வரையில்...

வெற்றி: என்னை நான் பிறருடன் பொருத்திப் பார்க்கும் வரையில்...

தோல்வி : பிறரின் இயலாமை..

மனம் : அந்த குரங்கை ரசிக்கத் தொடங்கி விட்டேன்.

அறிவு: என்னுடன் இருக்கும் சுயம்.

சுயம் + மனைவி = வாழ்க்கை

சுயம் + சமூகம் = சேவை

சுயம் + பிள்ளைகள் = பாசம்

சுயம் + மனிதம் = இறக்கம்

சுயம் + இயற்கை = வாழ்வியல்.

தமிழன் வாழ்வியல் பயின்றவன்.
இயற்கையை நேசித்து வாழ்ந்தவன்.
இயற்கையை வணங்குபவன், வழிபடுபவன்.

காடு சார்ந்து (குறிஞ்சி) , மலை சார்ந்து ((முல்லை) , வயல் சார்ந்து ( மருதம்) , கடல் சார்ந்து (நெய்தல்) பிறகு வரட்சி சார்ந்தும் (பாலை) வாழ்த்து உலகிற்கு வாழ்வியலை கற்பித்தவன்.

தமிழ் பயில்க ; தமிழன் இந்த உலகத்தை காப்பாற்ற பிறந்த அற்புதமான பிறவி.
மனிதம் வளர தமிழை காப்போம்.

தமிழ் ஒருவனை மனிதனாக மாற்றும்.

“பிறப்பொக்கும் எல்லா உயிர்க்கும் சிறப்பொவ்வா

செய்தொழில் வேற்றுமை யான்”.

யாதும் ஊரே; யாவரும் கேளீர் !!!

# எங்கள் தெரு

சோழநாடு சோறுடைத்து என்பது பழமொழி. எனவே சோறுடைத்த நாடு" சோற நாடு" ஆகிப் பின் சோழ நாடாகியது என்பர்.

இங்கே செவி வழி கேட்ட, உணர்ந்த செய்திகளை பதிவிடுகிறேன்.

குடந்தையைச் சுற்றி உள்ள சிற்றூர்களின் பெயர்கள் அதற்கான காரணங்களை ஆராயும்போது ஒரு ஒற்றுமையை காண முடிகிறது.

அவ்வாறே சோழ நகரத்திற்கு 'பழையாறை' தலை நகரமாக விளங்கி இருக்கிறது. அதற்கு ஆதாரமாக அரண்மனைக்காரத்தெரு, ஆரியப்படையூர், காவல்காரன் தெரு, பம்பப்படையூர் போன்ற பெயர் உடைய தெருக்களும், கிராமங்களும் கோயில் நகரை அலங்கரிக்கின்றன.

மேலும் சில விவரங்கள் :-

'மாதுளம் பேட்டை' என்பது "மகாதளம் பேட்டை" என்ற சொல்லின் மருவுதல் எனக் கொள்ளலாம்.

மகா தளம் பேட்டை அருகில் ஆனைக்காரன்பாளையம் உள்ளது.

இதுவே யானை படைக்கான தளமாகவும் இருந்து இருக்கக் கூடும்.

எனவே நம் முன்னோர்கள் பல படைகளை அமைப்பதற்கு மதா தளம் அமைத்து அதை "பேட்டை" என்று அழைத்தனர்.

மேலும் குடந்தையயின் வரலாற்று, தொழில் மற்றும் வணிகச் சான்றுடைய அடையாளங்கள்

1.பழைய அரண்மனைத்தெரு,
2.கம்பட்ட (நாணயம் , நிதி தொடர்புடைய) விஸ்வநாதர்

தெரு,
3. பஞ்சுக்காரத்தெரு,
4.நெல்லுக்கடைத்தெரு,
5.வேம்படித் தெரு (பித்தளை வியாபாரம்)
6. காசுக்காரத்தெரு,
7. அந்தணர்கள் குடியிருப்பு பகுதிகள்
A. சோலையப்பன் தெரு,
B. பக்த புரித்தெரு,
C.வேத பாடசாலை போன்றவை.

அரசலாற்றங்கரையில் நெசவாளர்கள் குடியிருப்பு நடந்து இருக்கிறது. அங்கே 'சவுராஸ்டிரா மக்கள் 'அதிகம் வாழும் பகுதி. அவர்கள் ஒன்று சேர்ந்து ஆரம்பித்தது தான் – "ராஜ ராஜேந்திரப் பேட்டை கூட்டுறவு சங்க பண்டகசாலை".

இப்படியாக செம்படியான் தெரு என்று சொல்லிக்கொண்டே போகலாம்.

ஆக சோழ மன்னர்கள் "குடிகளாக மக்களை" பிரித்து அவர்கள் செய்யும் தொழிலை வைத்து குடி அமர்த்தினர் என்று சொல்லலாம்.

ஆரிய படையூர் என்ற சிற்றூரில் "சோழன் மகாதேவின் சிலை" இருப்பதாக கூறுகின்றனர்.

உடையாளுர் – பட்டீஸ்வரம் போகும் வழியில் சில சிவன் கோயில்களை பார்க்கலாம்- பாழடைந்த நிலையில்!!

அவைகள் யாவும் ஊர் "பிரபுக்கள் மற்றும் நிழக்கிழார்" வாழ்ந்து மறைந்த நினைவுச்சின்னங்கள்.

இது மந்திரிகள் போன்றோரையும் உள் அடக்கும். அவர்கள் ராஜராஜ சோழனிடம்(ராஜாவிடம் ) பணியாற்றியதற்கு மரியாதை நிமித்தமாக உருவாக்கப் பட்டவை என்று கூறப்படுகிறது.

மேலும் பல உதாரணங்கள்-

இன்றும் 'திருவாடுதுறை ஆதீனத்தில் உள்ள தென்னத் தோப்பில் குட்டிக் கோயில்களை பார்க்கலாம் ' – இவைகள் யாவும் ஆதின கார்தாக்கள் மறைவுக்கு

பிறகு ஏற்படுத்தப்பட்ட நினைவுச் சின்னங்கள்.

நன்றி : பொருளாளர்
“சிவகுருநாதன் செந்தமிழ் நூல்நிலையம்”.
selvanrajan

# குடியை மறந்தோம் மனிதம்-படிப்பு-என்கிற மமதையில் மதம் பிடித்து ஆடுகிறது

என்ன ஜெய்சங்கர் , நல்லா இருக்கியா, தீபாவளி எப்படி போனிச்சு ? நீ மட்டும்தான் அடிக்கடி என்னோடு பேசிக்கொண்டு இருக்கிறே? நமக்கு இப்போ 62 வயது ஆகுது. ரிடெய்ர் ஆகி '3 ' வருடங்கள் முடிந்துவிட்டது.பேரன்கள் பார்த்துவிட்டோம்' -வந்த காலுக்கு பதில் பேச ஆரம்பித்தேன்.

"என்னதான் இருந்தாலும், என்னாலா அந்த முதல் வகுப்பு-9 வது சேரும்போது ; ஆசிரியர் எல்லோரையும் ABCD எழுதச் சொன்னது" – மறக்கமுடியாது.

அப்பா! இப்ப நினைத்தாலும் மனசு பகீர்ங்கிறது. ஏன்னா நாங்க குடந்தையில் இருந்து 1970ல் சென்னை வந்தோம். அப்பாவிற்கு தணிக்கை
பிரிவில் வேலை.

நான் 5வது முதல் 8வது வரை அந்த கருணீகர் தெரு , வேளாச்சேரியில் படித்தேன்.

படித்தேன் என்பதைவிட விளையாடினேன் என்பதுதான் எனக்கு இன்றும் நினைவில் இருக்கிறது.

அந்த எட்வின், பஷீர், பிரபாகர், பீத்தாம்குமார் என பல நண்பர்கள். அப்போ தமிழ் ஆசிரியர் சொன்னார் :- இங்க தமிழ் பசங்களை விட கன்னட, தெலுங்கு பிள்ளைகள் தமிழில் அதிகமார்க் எடுக்குது என்று .

அன்று அது உரைக்கவில்லை.
எல்லோரும் நண்பர்கள். நண்பர்கள் இடையே என்ன பொறாமை என்ற பெருந்தன்மை.

இப்படியாக, கோலிகுண்டு, ஐஸ் பாய், பம்பரம்

எனபறந்து பறந்து விளையாடியது....அந்த வேளாச்சேரி ஏரியில் கோடையில் விளையாடிய கிரிக்கெட்-நான் ஒரு off ஸ்பின்னர் மற்றும் opening பேட்ஸ்மென்.

தெரு போட்டிகள் வெகு ஜோராக நடக்கும். ஆக எனக்கு குடந்தையும் , சென்னையும் கிராமங்களாகவே தெரிந்தது.

ஏதே , நீ அன்று பக்கத்தில் இருந்ததால், உன்னை வைத்து ஒப்பேத்தினேன் – உனக்கு நினைவுக்கு வரவில்லை போலும் அந்த ABCD ....

அது சரி , மேலும் ஒரு சம்பவம் :- அந்த கால கட்டத்தில் நான் கால் ஆண்டு தேர்வில் ஆங்கிலத்தில் 13 மார்க் எடுத்தது. அதற்கு என் தகப்பனார் ‘மாடு மேய்க கூட நீ லாயக்கு இல்லை’ என்று திட்டியது.

நினைவு இருக்கிறதா ? நீயும் தான் அப்போது அருகில் இருந்தாய் !!???

என்னால் இன்றும் மறக்க முடிய வில்லை.

என்ன அதையே ‘சவாலாக’
கொண்டு படித்து பட்டம் பெற்று வங்கி வேலையில் தேர்வு பெற்று மேலாளராகவும் உயர்ந்து ஓய்வும் பெற்றுவிட்டேன்.

“அந்த நெருடல் ” என்னை உயர்த்தியது. உண்மை.

ஆனால் , இன்று சிந்தித்துப் பார்க்கிறேன்.

“அந்த வார்த்தை “- ‘மாடு மேய்ப்பது’ அவ்வளவு கேவலமான தொழிலா?

அப்படி குடிகளாக மாடு மேய்க்காவிட்டால் நாம் வளர்ந்து இருப்போமா இப்போது.

நினைவுகள் ஓட .... வேறு விஷயத்தை பேசி நண்பனிடம் இருந்து விடைபெற்றேன்.

குறிப்பு :- எங்களுக்கு ‘கார்காத்த ‘ என்ற குலப் பெயர் உண்டு. ஆக குடிகளை மறந்தோம் -‘மறந்தார்’
என் தகப்பனார் என்று தான் சொல்லவேண்டும்.

சிறப்பு :- நாங்கள் இன்று இருக்கும் வீதி ‘நாணயக்காரத் தெரு’ என்று அழைக்கப்படுகிறது.

இதன் சிறப்பு , அந்த காலத்தில் சோழர்களுக்கு

“நாணயங்களை” செய்து தந்த வணிகர்கள் எங்கள் குல மக்கள்.

மேலும் ஒரு சிறப்பு :- இங்கு அமைந்து உள்ள “சிவ குருநாதன் செந்தமிழ் நூல் நிலையம்” கடந்த 50 வருடங்களாக நல்ல முறையில் நடத்தப்பட்டு வருகிறது. 50000 க்கும் மேற்பட்ட இலக்கிய, இலக்கண நூல்கள் உள்ளன. அன்பர்கள் பயன் படுத்திக்கொள்க.

குடந்தையில் இருந்து பேசுகிறேன்.

# ஒவ்வொரு நாளும் நாம் ஏன் போராட வேண்டும் ?

ஒவ்வொரு நாளும் நாம் ஏன் போராட வேண்டும் ?

அப்படி நினைப்பது தவறு. போராட்டம் வாழ்க்கை என்றால் , போர் புரிபவர்களை என்ன என்று சொல்வது !!

ஆம் ! போர் என்றால் களத்தில் எதிரியுடன் நேருக்கு நேர் நின்று எதிர்கொள்வது ; அதில் சர்வம் நிச்சயம் – உயர் இழப்பு , அல்லது உயிருக்கு உத்திரவாதம் இல்லை.

இருந்தும் போர் களத்தில் போர் புரிபவர்கள் யாரும்" நேருக்கு நேர் " நின்று குஸ்தி செய்வது இல்லை.

பதுங்கி தாக்கியும் ; பதுங்கு குழிகள் கொண்டு தங்களை காப்பாற்றிக் கொள்ளவும் முயல்கின்றனர்.

சரி, இப்படி எடுத்துக்கொள்வோம் .வாழ்க்கை என்பது எல்லோருக்கும் , எப்போதும் நினைத்த காரியங்களை செய்யும் போது கை கூடுவது இல்லை.

அப்படியே விளைவுகள் சற்றே நிம்மதி அளித்தாலும் அதனை நூற்றுக்கு நூறு ஏற்றுக் கொள்ள நம்மால் முடியாது.

அப்படியே சங்கடங்களும் , அசௌரியங்களம் நம்மை எப்போதும் ஆட்டிப் படைக்கின்றன.

இப்படி இருக்க யார் இங்கே நின்று நிலைத்து நம்மை சர்வமும் சத்தியமுமாக ஆட் கொண்டு நம்மை காப்பாற்ற முடியும்.

அப்படி முனைபவர்களை நம்பி கூட்டம் கூட்டமாக செல்வதும் , பிறகு உள்ளதை (உள்ளம்) இழந்து உடைமைகளை ( சேர்த்து வைத்த ) கொடுத்து அழுவதும் வாழ்க்கையில் நடக்கும் அகப் போர் .

இந்த கேள்வியை கேட்டுக் கொண்டால் அதன்

விளைவுகள் நம்மிடத்தில் இருந்தே பிறக்கும்.

இப்படி நான் எழுத காரணம் – நான் தற்போது படுத்துக் கொண்டு இருக்கும் புத்தகம்:-

கரையில் காஃப்காவின் சிறப்பு என்ன?

சில நாவல்கள் தங்கள் கதைக்களத்துடன் உங்களை இழுக்கின்றன, ஆனால் முரகாமி மாயத்தோற்றமான நிலப்பரப்புகளை உருவாக்குவதன் மூலம் வாசகரின் கவனத்தை ஈர்க்க முடியும், அங்கு கனவுகள் எப்போது முடிவடையும் மற்றும் யதார்த்தம் தொடங்கும் என்பது உங்களுக்குத் தெரியாது. காஃப்கா ஆன் தி ஷோர், விதியுடனான நமது உள்ளார்ந்த தொடர்பையும், இடப்பெயர்ச்சியால் ஏற்படும் இழப்பின் விளைவுகளையும் ஆராய்கிறது.

# திக் , திக் காட்சிகள் ; ஊரின் தெரு கோடியில் இருந்து.......

திக் , திக் காட்சிகள் ; ஊரின் தெரு கோடியில் இருந்து.......

அந்த மனை சுமார் 50 வருடங்களுக்கு மேலாக காலியாகவே இருந்தது. அதன் எதிரே அரசினர் ஆரம்பப் பள்ளிகூடம். அங்கே தான் தேர்தலின் போது பூத் அமைத்து ஓட்டுப் போட எல்லா ஏற்பாடுகளும் செய்து கோலகலமாக இருக்கும். இரு புறமும் வீடுகள்.

பள்ளிக்குச் செல்லும் மாணவர்கள் அந்த மனைக்குச் செல்ல அனுமதிக்கப்படுவது இல்லை. இது ஒரு சாபமாக பார்க்கப்பட்டது. காரணம் பள்ளியில் விளையாட்டு மைதானம் இல்லை.

அந்த மனை சுமாராக 1/2 cent அதாவது 5 கிரவுண்டக்கு மேல் என்று சொல்லிக்கொள்ளலாம்.

ஒரு வழியாக அந்த தெரு கவுண்சலர் அங்கே ஷெட் அமைத்து 10 கார்கள் நிற்பதற்கு வழி வகை செய்தார். இதன் மூலம் அங்கே மக்கள் நடமாட்டம் அதிகரித்தது.

ஆரம்பித்து ஒரு சில மாதங்கள்தான் ஆகி இருக்கும். சுமார் 8 மணி அளவில் காலையில் கூட்டம் கூடியது. அதுவே சிறுக சிறுக பெரிய போர் களமாக மாறியது. எங்கும் கூச்சல், குழப்பம் . தெருவே அல்லோல, மல்லோல பட்டது போங்க !!

காவல் துறைக்கு செய்தி அனுப்பப்பட்டு S.P அங்கு வந்து கூடினார். மனை சுத்தமாக தடுக்கப்பட்டு அங்கு செல்ல யாவருக்கும் அனுமதி மறுக்கப்பட்டது.

செய்தி அறிந்து ஊடகங்கள் அங்கு கூடின. சமூக ஊடகங்கள் அதிகமாக இருந்ததாக பார்த்தவர்கள் கூறினார்கள். மேலும் காமிராக்கள் , செய்தி

சேகரிப்பவர்கள் என 100 க்கும் மேற்பட்டவர்கள் கூடியதால் அங்கே பரபரப்புக்கு பஞ்சம்இல்லாமல் இருந்தது என்றுதான் சொல்ல வேண்டும்.

பிறகு செய்தி வெளியானது; அதுவே ‘Breaking News’ ஆக ‘Viral ‘ ஆனது.

அங்கே நிற்கப்பட்டு இருந்த கார்களின் பின் வரிசையில் உள்ள ஒரு வண்டியின் பின் இருக்கையில் ஒரு நபர் சடலமாக மீட்டு எடுக்கப்பட்டு இருக்கிறார் என்றும், இதுபற்றிய முழுவிவரம் பிறகு தெரிவிப்போம் என்றும் S P தன் முதல்கட்ட அறிக்கை வாயிலாக மீடியாவிற்கு சொன்னார்.

அதற்குள் அந்த மனைப் பற்றியும் , அந்த மனையின் வாயிலாக வந்த கதைகளும் you – tube முதல் உள்ளூர் பாட்டி வரை உடன பேசு பொருள் ஆனது.

கவுன்சிலர் அதற்குள் தலைமறைவு என்கிற Flash News பின்னோட்டமாக ஒளிபரப்பப்பட்டது.

forensic மற்றும் உளவுத்துறை சார்ந்த நிபுணர்கள் வரவழைக்கப்பட்டு காரணங்கள் சேகரிக்கப்பட்டன.

அவர்கள் செய்தி சேகரிக்க உதவியவர்கள் ‘எதிரே இருந்த பள்ளி ஆசிரியர்கள் மற்றும் பக்கத்து வீட்டு சொந்தக்காரர்கள்’.

எல்லோரிடமும் ஒரே மிரட்சி; பதட்டம்.

ஒருவழியாக அந்தக் காரை அப்படியே எடுத்து வந்தனர். இப்போது முழுவதும் மறைக்கப்பட்டு இருந்தது. முன்புறம் இருந்த Driver மட்டும் எல்லா மீடியாக்களுக்கும் தெரியும்படி இருந்தார். உள்ளே உள்ள அந்த இறந்த நபரைப் பற்றிய செய்தி இன்னும் வெளிவரவில்லை.

மணி சுமாராக ஒரு மணிக்கு மேல் ஆகி இருந்தது.கூட்டம் சற்று கலைந்து இருந்தாலும் “வேலை இல்லாதவர்கள்” எங்கள் தெருவில் சற்று அதிகம் என்றே சொல்ல வேண்டும்.

பல வகையான photos எடுக்கப்பட்டது. கைரேகை நிபுணர்கள் தங்கள் ரகசியத்தை கட்டிக் காத்தனர்.

தமிழ்நாடு முழுவதும் எங்கள் பள்ளியும், தெருவும் திரும்பத் திரும்ப ஒளிபரப்பு செய்யப்பட்டது.

பள்ளிக்கு விடுமுறை அறிவிக்கப்பட்டு எங்கள் தெருவின் Entry & Exit points மூடப்பட்டன.

அன்று மாலை மாநகர காவல் ஆணையர் சென்னையில் இருந்து மீடியாக்களுக்கு பதில்கூறினார்.

“காரின் உள்ளே சடலாம கண்டு எடுக்கப்பட்ட நபரை அடையாளம் கண்டுவிட்டோம்; அவர் ஒரு Asian from China “.

குற்றவாளியை ஒருவாரத்தில் பிடித்து விடுவோம் என்று அவர் தன் முதல் கட்ட அறிக்கையில் சொன்னது Viral ஆனது.

அடுத்து ,அடுத்து கவுன்சலர் காட்டுமன்னார்குடி அருகே பிடி பட்டார் என்ற செய்தியும் பேசு பொருள் ஆனது.

எங்கள் தெரு கவுன்சலர் கூறுகையில் ‘செய்தி கிடைக்கப் பெற்றேன் ; வதந்திகளை நம்ப வேண்டாம்; நான் “திருப்பதி சென்று திரும்பி வருகிறேன், வரும் வழியில் என் மைதுனர் வீட்டில் இருந்து பேசுகிறேன்”.

மேலும் “அங்கு நான் சென்றது என் மகள் வழி பேத்தி பிறந்தமைக்கு குடும்பத்துடன் சென்று வழிபட்டு வருவதாகவும் மிகுந்த கவலையில் சொன்னார் “.

என் பங்கிற்கு எல்லா ஒத்துழைப்பையும் அரசுக்கும் , சம்பந்தப்பட்ட துறைக்கும் முழுமனதுடன் எந்த ஒரு பாரபட்சமின்றி எடுத்துறைக்க கடமைப்பட்டு இருக்கிறேன் என்பதை உங்கள் (செய்தி மற்றும் காட்சி ஊடகங்கள் ) வாயிலாக மக்களுக்கு தெரிவித்துக் கொள்வதாக சொன்னார்.

அதற்குள் அங்கே உள்ள மீடியாக்கள் பள்ளி ஆசிரியர்கள் மற்றும் தெருவாசிகளிடம் ‘மனை பற்றியும் , மனையின் மர்மம்’ பற்றியும் பேட்டி எடுத்துக் கொண்டு இருந்தனர்.

இத்தகைய பேட்டியை பார்க்க அங்கே கூடிய மக்கள் கூட்டத்தை கலைக்க சிறிதாக Lathi_ Charge செய்ய

வேண்டி
இருந்தது.

எல்லாவற்றையும் விட தெருவின் ஆஸ்தான ஜோதிடர் ஒருவரின் பேட்டி 10 நிமிடங்கள் நீடித்தது. அவர் ஏற்கனவே அங்கு பில்லி , சூன்யம் வைத்து இருப்பதாகவும் இந்த பேயை விரட்ட கேரளா சென்று மாந்திரியம் கற்று வந்ததாகவும் தெரிவித்தது பெரும் அதிர்வலைகளை ஏற்படுத்தியது.

இவ்வாறாக செய்திகள் வந்தவண்ணமே இருக்க இதை தடுக்க அரசு உடனே செயல்பட்டு ஒரு order பிரகடனப்படுத்தியது.

“யாரும் எந்த ஒரு மீடியாவிற்கும் எந்த ஒரு தகவலையும் சொல்லக்கூடாது; அப்படி மீறினால் அவர்களுக்கு 2 வருட கடுங்காவல் தண்டனை விதிக்கப்படும் என்றும் பிரகடனப்படுத்தியது.

இதுவும் ஒரு “போக்சோ” சட்டம் மாதிரி இருப்பதாக Social Media க்களில் Memes கள் ஓடின.

நிலைமை சகஜமாக 10 நாட்கள் ஆகின. மீண்டும் பள்ளி மாணவர்கள் பள்ளிக்குச் செல்லத் தொடங்கினர்.

ஒரு 15 நாட்கள் கழித்து வந்த அரசு செய்தி:

“அந்த பகுதியில் ஏதோ வீரன் இருப்பதாகவும் அங்கே செல்லக் கூடாது என்கிற செய்தியும் அறிந்தோம்; நாங்கள் ஊர் மக்களின் மன நிலையை நன்கு அறிந்து இருக்கிறோம். ஆகவே அமைதி காத்து ஒத்துழைக்க வேண்டுகிறோம் ” என்று முதன்மை செயலாளர் செய்தி வெளியிட்டு இருந்தார்.

உங்க ஊர் கவுன்சலர் மூன்று முறை தொடரந்து வெற்றி நல்ல பல காரியங்களை செய்து உள்ளார். ஆகவே எந்த ஒரு வதந்தியையும் நம்ப வேண்டாம் – பள்ளியில் பெரிய விளம்பரம் செய்யப்பட்டது.

இறந்து போன நபர் ஒரு அயல் நாட்டுக்காரர் என்பதால் , நாங்கள் டெல்லியில் உள்ள Consulate_General ஐ தொடர்பு கொண்டு இது வரை நடந்த findings ஐ மத்திய

அமைச்சகத்திடம் சமர்பித்து உள்ளோம்.
ஆகவே இது குறித்து அறிய விரும்பினால் பொதுமக்கள் www.investigation.tn.gov.in/cardeath என்கிற website அணுகலாம்.
உங்கள் சந்தேகங்களையும் எங்களுக்கு email carinvestigation@tngov.in மூலம் தெரியப்படுத்தினால் துப்பு துலங்குவதில் பெரும் உதவியாக இருக்கும் என்றும் கூறப்பட்டது.
இதில் ஒரு வெளிநாட்டு பிரஜை சம்பந்தப்பட்டு இருப்பதால , எந்த ஒரு அசம்பாவிதமும் நடக்கக் கூடாது என்பதில் ministry of external affairs, government of India கண்காணிப்புடன் செயல்பட்டது என்று தான் சொல்ல வேண்டும்.
இவ்வாறாக ஒரு மாதம் சென்று விட்ட நிலையில் மக்கள் அமைதியை இழந்து தத்தம் வேலைகளை பார்பதில் மும்முரமாக இருக்கத் தொடங்கினர்.
தற்போதைய செய்தியாக “அடியார்க்கு நல்லான்” என்கிற செய்தி ஊடகம் ஒரு தகவலை பரப்பியது.
அதாவது , இதுவரை கிடைத்த தகவல்கள் எல்லோருக்கும் தெரியும். ஆனாலும் எல்லோரும் ஒன்றாக நினைத்த ஒரு விஷயம் இங்கே “வீரன்” இருப்பது உறுதி செய்யப்படவில்லை.
இறந்த சடலத்தில் உள்ள Car தவிர்த்து மற்ற கார்கள் அதே தெருவில் அணிவகுத்து நின்றன. வீரன் பற்றிய அரசு தகவல்களை மக்கள் நம்புவதாக இல்லை. இது ஒரு சாமியாரிடம் இருந்து வந்து இருக்க வேண்டும் என்பது அவர்கள் நம்பிக்கை:
இப்படியாக ஒவ்வொருவரும் தத்தம் கருத்துக்களை காட்சி ஊடகத்திற்கு பகிர்ந்த வண்ணம் இருந்தனர்.
அவர்களின் முழு நம்பிக்கை மற்றும் எதிர்பார்ப்பு ” இந்த பகுதியை Restricted Area For Humans என்று அறிவிக்க வேண்டும் என்பது தான்.
அப்படி இல்லையேல் இது ஒரு மாபெரும் போராட்டமாக மாறும் என்றும் எச்சரித்தனர்.

எதிர் கட்சிகள் இதில் குதிப்பதற்குள் ஏதாவது செய்ய வேண்டும் என்று அரசும் முன் வந்து அவ்வாறே செய்தது.

” பேய்கள் ஜாக்கிரதை “-அத்து மீறினால் அதிக பட்ச 10 வருட கடங்காவல் தண்டனை.......

கண்காணிப்பு கேமராக்கள் வைக்கப்பட்டன. அங்கே ராட்ச மின் கம்பம் நிறுவப்பட்டது. அது அந்த தெருவிற்கே நல்ல வெளிச்சத்தை தந்தது. மக்கள் மகிழ்ச்சி உற்றனர்.

ஒரு மாததிற்கு பிறகு கிடைத்த செய்தி:

தெரு கவுன்சலரிடம் மேற் கொண்ட தீவிர விசாரணையில் , அவரின் தாய் மாமனும் அதே தெருவில் இருப்பவருமான ஒருவரின் தூண்டுதலின் பேரில் இது நடந்து இருப்பதாக முதல் கட்ட விசாரணையில் தெரிய வந்துள்ளது.

3 மாதங்களுக்கு பிறகு:

அந்த நபர் அதே தெருவில் 30 வருடங்களாக வசித்து வருகிறார். அவருடைய மகன்கள் USA வில் பெரிய Sortware நிறுவனங்களில் பணிபுரிந்து வருவதாக தெரியவந்து உள்ளது.

மேலும் அந்த நபரிடம் விசாரணை மேற்

கொண்டதில் artificial intelligence மூலம் இந்த உடலை Embalming செய்து உள்ளதாக அதிகார பூர்வ தகவல்கள் தெரிவிக்கின்றன.

மேலும் அதிர்ச்சி ஊட்டும் வகையில் உள்ளது என்ன என்றால் , இறந்த உடல் ஒரு மனிதக் குரங்கு என்பதை institute of forensic science laboratory, New Delhi தன்னுடைய விரிவான அறிக்கையில் கூறி இருப்பது கல் நெஞ்சங்களையும் கரைக்கும் விதத்தில் இன்பதாக பிரதம மந்திரி தன் twitter handle ல் தெரிவித்து உள்ளார்.

தற்போது நிலவரப்படி : india and china are maintaining their status quo.

இந்த செயலுக்கு காரணம் கவுன்சலர் பெயரை கெட்டு அடிக்க வேண்டும் என்பது தானாம்- அரசியல்

# தம்பட்டம் அடிக்கிறேன்; வேறு என்ன செய்ய .....

எங்கள் வீட்டின் அருகே அரசலாறு பாய்ந்து ஓடுகிறது.

பாய்ந்து ஓடும் – காவேரியில் தண்ணீர் திறந்து விடும் போது; மற்ற நேரங்களில் சிறு சிறு ஓடையாய் தென்படும்.

நீர் ஓடைகள் நீர் திட்டுகளாக மாறும். பிறகு திட்டுகளில் மணல் சுரண்டப்பட்டு பள்ளமும், படுகுழியுமாகவும் காட்சி தரும்.

இது நடைமுறை நிகழ்வு.

இந்த நீர் திட்டுகளின் ஓரம் பாத்தி கட்டி , நாத்து நட்டு , நீர் பாட்சி , பயிரிட்டு சாகுபடியும் நிகழும்.

ஒரு புறம் காவேரி தாய் நெகிழியை சுமக்கிறாள் ; மறுபுறம் இருக்கும் வீடுகள், மருத்துவ மனைகள், உணவு விடுதிகள் ஆகியவற்றில் இருந்து வந்து சேரும் கழிவுகளும் காவேரியின் கிளை ஆறுகளை அலங்கரிக்கும் கண்ணீர் புக்கள் !!!

யாரைச் சொல்ல ; என்ன சொல்ல ...

நானும் தான் ஒரு விதத்தில் காரணமாக இருக்கிறேன்- எப்படி தட்டிக் கேட்பது என தெரியாமல் , இப்படி தம்பட்டம் அடிக்க ?

கேட்டதற்கு நன்றி .

எங்கள் தெரு

எங்கள் தெருவை எடுத்துக்கொள்ளுங்கள் ; வரும் போதும் ,போகும் போதும் சதா சர்வ தினமும் சொல்லிக்கொண்டுதான் இருக்கிறார்கள் – துப்புறவு பணியாளர்கள்.

மக்கும் குப்பை – இவற்றில் காய்கறி கழிவுகள், தோட்டக் கழிவுகள், முட்டை ஒடுகள், காய்ந்த மலர்கள்,

வாழை தோல்கள் என பல....
மறு சுழற்சி அல்லது மக்கா குப்பை- பிளாஸ்டிக், பொருட்கள் , அலுமினியம், இரும்பு என பல...
பிரித்து இரண்டு குப்பை தொட்டியில் இடும்படி பல தடவை சொல்லியும் எந்த ஒரு மாற்றமும் நிகழவில்லை.

ஏதோ நம்மை விட்டு குப்பை அகன்றுவிடுவதாக நினைக்கிறோம். ஆனால் இது மறு சுழற்சி ஆகமால் மேலும் நம் மனித சமுதாயதற்கு கேடு விளைவிக்கின்றது என்பது தெரிந்தும் யாரும் கேட்பாரில்லை.

எங்கள் தாராசுரம் காய்கறி மார்கெட் உள்ளே "திடக்கழிவு மேலாண்மை கூடம்" சிறப்பாக செயல்பட்டு வருகிறது.

அவர்கள் செய்யும் பணி இறைப்பணி, அவர்களுக்கு என்று கோயில் கட்ட வேண்டும். அப்படி ஒரு சுத்திகரிப்பு செயலை மனிதகுலம் வாழ செய்து கொண்டு இருக்கிறார்கள். அவர்களை மனதார வணங்கி வந்தேன்.

திரும்பி வரும் வழியில் காய்கறி அங்காடியின் எதிர்புறம் சுமார் 20 க்கும் மேற்பட்ட பணியாளர்கள் அரசலாற்றின் கரையோரம் இருக்கும் குப்பை ( நெகிலி) எடுத்துக் கொண்டு இருந்தது என் கண்களில் இரத்தத்தை வரவழைத்து.

இது என்ன சமூகம்? ; இந்த நிலையை யார் சொல்லி புரிய வைப்பது ? இந்த படிப்பு எப்படி சாத்தியமாகும்.

சமூக அக்கறை உள்ளவர்கள் ஏன் இந்த விசயத்தில் மெத்தனம் காட்டுகிறார்கள் ?
கழிவுகளை பிரிக்காமல் விட்டால் அந்த வீட்டிற்கு தினமும் ரூ 100 முதல் அபராதம் விதிக்கப்படும் என்று சொன்னால் திருந்த வாய்ப்பு இருக்கிறதா ?

இது மிகவும் அவசரப் பிரச்சனை. நாம் ஒவ்வொரு ஊரையும் " பள்ளிக்கரணை" யாக மாற்றினால், தமிழகத்தில் 'அகம்' இருக்காது என்பதை புரிந்து கொள்ள வேண்டும்.

பயணம் – மாறியது

மும்பை மார்க்கம் தூத்துக்குடி சென்னை ரயில் 3.45 க்கு வந்து அடைந்தது.

என்ன ரமேஷ் ,வா, வா, வா, ‘நீ வருவேன்னு நான் அரை மணி நேரத்துக்கு முன்பே காத்து இருக்கிறேன்.

நீ வருகிற ‘ தூத்துக்கு மும்பை எக்ஸ்பிரஸ் ‘ ரயில் திங்கள் கிழமை 3.45 க்கு வரும் , போய் அழைத்துக் கொண்டு வா என்று அண்ணன் ஏற்கனவே சொல்லி விட்டார். ‘

ஏதோ அப்பவுக்கு எதிர் பாராத “மீட்டிங்” இருந்ததால் இரண்டு டிக்கெட்யை Cancel செய்து நீ விரும்பியதால் உன்னை மட்டும் ஞாயிறு 10.30 காலை கும்பகோணத்தில் இருந்து ஏற்றி விட்டதையும் கூறினார்.

உன் அப்பாவும், அம்மாவும் காலை 6 மணிக்கு விமானம் மூலம் வந்து சேர்த்து விட்டனர்.

“ஏன் அவனை மட்டும் தனியே அனுப்பி விட்டாய்” என்று கேட்டதற்கு உன்னுடன் படிக்கும் சக மாணவனும் அதில் சோலாப்பூர் வரை வருவதால் உன் விருபத்திற்கு ஏற்ப டிக்கெட்டை கேன்சல் செய்யவில்லை என்றும் சொன்னதாக சித்தப்பா சொன்னது அவனை அலைக்கழிக்க செய்தது; அதைக் காட்டிக் கொள்ளாமல் ஆமாம் என்று சொல்லி தலையை குனிந்து கொண்டான்.

கார், ஒரு மணி நேர பிரயாணத்திற்கு பிறகு ‘கார்வெஸ்ட்’ என்கிற அவர்கள் வாழும் நகர் புற பகுதிக்கு வந்து அடைந்தது.

அப்பா, ஆற அமர அவனைப் பார்த்து –

” எப்படி இருந்தது பயணம்” மதியம் சாப்பிட்டாயா ; ‘வா குளித்து விட்டு மாலை எல்லோரும் சத்திரபதி சிவாஜி டெர்மினஸ் சென்று பார்த்து விட்டு வருவோம் ‘ என்று சொல்லி முடிப்பதற்குள் அம்மா அவனை ஆறத் தழுவினாள்.

அவன் அழுதது அவர்களுக்கு மட்டும் தான் தெரியும்.

பிறகு வந்த இரண்டு நிமிடங்கள் அவன் தன் இறுப்பை

உணர்வதற்குள் கால தேவனின் மடியில் சரணடைந்தான்.

“யாருக்குத் தெரியும் அவர்கள் வீட்டுச் சாமாச்சாரம்”

# நாம் எல்லாம் நடிக்கப் பிறந்தவர்கள்

தேவகி, ஒரு சமுக செயல்பாட்டாளர்; எழுத்தாளர்; ஓவியர் என்று பல முகத்தன்மை கொண்டவர்.

அவருக்கு இப்போது வயது 80 ஆகிறது. இன்றும் அவரை சந்தித்து நேர்காணல் காண “காட்சி ஊடகங்கள் காத்து இருக்கின்றன.

அவருடைய பேச்சு இப்போது அதிகம் பகிரப் பட்டு வருகிறது.

ஒரு நிருபர் அவரிடம் பேட்டி காணும் போது :

“மேடம், நீங்கள் சமூக அக்கறை கொண்டவர்; பெண்கள் விஷயத்தில் குரள் கொடுக்கத் தவறியது இல்லை. அது அவர்களுடைய ‘உடையைப் பற்றியோ, மதரீதியான தடைகள் பற்றியோ – ‘அடிப்படை நீதி’-எல்லா மனித குலத்திற்கும் பொருந்தும் என்றும் பேசிவந்து உள்ளீர்கள்”.

என்னுடைய நேரடியான கேள்வி?

“பூனை நடை” என்கிற பெயரில் நடிகைகளும், அவர்களைப் பின் தொடர்ந்து பெண்கள் ( பள்ளி, கல்லூரி உட்பட) தங்களை கேளிப்பொருளாக காட்டிக் கொண்டு , முக நூலிலும், இன்ஸ்டாகிராமிலும் பகிர்ந்து வருவதை எப்படி பார்க்கிறீர்கள் ?

ஒரே வார்தை; அதுவே வாக்கியம். இது ஒரு மாயை. Like பெருவதற்காக செய்யப்படும் ஒரு “விளையாட்டு வலை,” . சிறிது காலம் களித்து புளித்து விடும். மனிதனுக்கு மறதியே வரம்.

இது தனி மனித உரிமை; மேலும் இந்த செயல் பிறர் மனதை , மதத்தை, இனத்தை புண்படாத விதத்தில் இருக்கும் பட்சத்தில் இதை ஒரு ‘பொழுது போக்காக’ எடுத்துக் கொண்டு கடந்து செல்வதே மேல்!

ஆண் தன்னை ஆளுமையாக காட்டுக் கொள்ள பல வழிகளை நாடுகிறான். இதுவும் ஒருவகையில் பெண்கள் தங்கள் “ஆளுமையை ” இந்த வழியில் வெளிக் கொணர்கிறார்கள் என்று எடுத்துக் கொள்ள வேண்டயது தான்.

இதில் பெண்மை, கற்பு என்று தொடர்பு படுத்தி பேசுவது அபத்தம். இது ஒரு மனப்போராட்டத்தின் வெளிப்பாடு; இதை ஏற்றுக் கொள்வதும்; நிராகரிப்பதும் அந்த அந்த சமூகத்தின் சிந்தனைக்கு விட்டு விடுகிறேன்.

இதுவே உலவியில் ரீதியான பதிலாகவும் இருக்கும்.

வேறு ஏதாவது ‘விடயம்’ இருந்தால் , இந்த காணொளியைப் பார்பவர்கள், ‘கமெண்ட்’ செய்ய கேட்டுக் கொள்கிறேன். சமூகமாக இருந்து சுமூகமாக என்ன செய்ய முடியும் என்பதைப் பார்ப்போம்.

மேலும் கோட்பாடுகளும் , சிந்தனைகளும் நாட்டுக்கு நாடு, இனத்துக்கு இனம் , அரசியலுக்கு அரசியல் வேறுபடும்.

அமெரிக்காவில் “பொருளதாரக் குற்றம்” பெரிய குற்றம். மேலும் ஒருவருடைய விருப்பத்தில் அல்லது சுகந்திரத்தில் தலையிட அரசுக்கும் உரிமை இல்லை.

ஆனால் , நம் நாட்டில் “தலை கீழ் “.

பொருளாதாரக் குற்றம் மன்னிக்கப்படுகிறது . தனிநபரின் அந்தரங்கம் பேசு பொருளாக மாறுகிறது.

வாழ்வியலும் , ஒழுக்கமும் பொருளாதாரத்தில் இருந்து மீட்கப் படவேண்டும்.

தெளிவு வரும் ; தெளிவோம் !!!.

# கண்ணும கண்ணும் மோதிக் கொண்டால் ....

நண்பன் கோபியிடம் இருந்து மூன்றாவது முறையாக ஷரிக்கு அலைபேசியில் அழைப்பு வந்து கொண்டே இருந்தது.

‘செல்லை’ எடுத்த தேவி- “இதோ பாருங்க உங்க நண்பருக்கு நீங்க மேனேஜராக இருக்கும் போது வீடு கட்ட உதவுனீங்க....

அவர் மகன் வெளிநாடு சென்று படிக்க மேலும் கடன் உதவி செய்தீங்க!...

இப்ப , நம்ம ஒரே பொண்ணு கல்யாணத்துக்கு இருக்கா ; ஏதாவது “கமிட்” பண்ணீங்க ? , நான் என் வீட்டோடு “கமிட்” ஆகி விடுவேன்”.

குளித்து, சற்று ஆசுவாசமாக ‘ஸைலண்ட்’ மோடில் உள்ள போனை ஆன் செய்து பேசினான் – ஹரி.

டேய்! எப்படி இருக்க .நான் ஓய்வு பெற்று 3 வருடம் ஆகிறது.

அப்போது வந்தது தான் நீ; அதற்கு அப்புறம் வரவே இல்லை – கோபி;என்று என் பொண்டாட்டி ரொம்ப ஆதங்கப்படுகிறாள்.

மகளுக்கு அடுத்த மாதம் கல்யாணம் வைத்து இருக்கிறேன். அதற்கு குடும்ப சரிதமாக வந்துவிடு.

“அப்பா !!! ஹரி பிழைக்க கற்றுக்கொண்டார். நல்ல ராஜதந்திரம் ; உண்மையை எப்படி பக்குவமாக சொல்லித் தப்பிக்கிறார்.” என்று மனைவி நினைப்பதை எண்ணி சந்தோஷப் பட்டுக் கொண்டு பேச்சை தொடர்ந்தான் ஹரி.

அப்படியா , ரொம்ப சந்தோவும் !!

இப்படி ஒரு வாய்ப்பு எங்களுக்கு கிடைக்காது.

ஆனால் இதை நான் ஏற்றுக்கொண்டால் என் மனைவி சம்மதிக்க மாட்டாள்.

Sorry, நட்புதான் முக்கியம்.

இங்கே வரும் போது நாங்கள் வந்து பார்க்கிறோம். என்றும் எங்கள் ஆசீர்வாதம்.

கண்கள் நீண்டன; பிறகு விரிந்தன.

என்ன என்பதற்குள் "voice recorder' ஒலித்தது.

என் மகன்-கௌசிக்; உனக்கும், எனக்கும் குடும்பத்தோடு LONDON சென்று வர TICKET ஏற்பாடு செய்து உள்ளான்.

அவனுக்கு உன் மகள் கல்யாணத்திற்கு பிறகு இரண்டு மாதம் கழித்துத் தான் என்பதால் , நானும் சரி என்று சொல்லிவிட்டேன்.

உன் சம்மதம் இருக்கும் என்று நானும் உறுதி அளித்துவிட்டேன்.

இது அவன் உனக்கு செய்யும் "கைமாறு" அல்ல.... எனக்கு செய்யும் கடமை.

தப்பாக நினைக்காதே ?!

கண்களில் கண்ணீர் கரைந்து வற்றத்தொடங்கியது.

– முற்றும்.

R.selvaraj,

# எனக்கு உரிமை இல்லை ?

‘என்னதான் இருந்தாலும் நீ அப்படி சொல்லி இருக்கக் கூடாது, ரொம்ம வருத்தப்பட்டான்’.

சொல்லி சொல்லி ஆத்துப்போறான்.

அப்படி என்ன தான் அவனை சொன்ன?

நான் சொல்றது இருக்கட்டும், இதற்கு காரணம் தெரியாம பேசாதே!?

என்ன அப்படி பொல்லாத காரணமோ?

சொல்றேன். ஆனால் சொல்றதுக்கு முன்னாடி , அவன் ஏன் அப்படிச் சொன்னான் என்பதை கேட்காமல் நான் சும்மா இருக்கப்போவது இல்லை.

அப்பா! சும்மா இறு! அல்லது சும்மா இல்லா போ ; அதைப் பற்றி எனக்கு கவலை இல்லை.

அவன் சொல்றதைச் சொல்லி விட்டேன். இனி உன்பாடு, அவன் பாடு, எனக்கு ஒண்ணும் ஆகப்போறது இல்லே இதுலே ?

‘அது சரி ,சும்மா இருந்த சங்கை ஊதிக் கெடுத்தானாம் ஆண்டிங்கிறது மாதிரி, சும்மா விட மாட்டேன் உங்க ரெண்டு பேரையும் . ஞாபகம் வைத்துக்கோ’.

டேய் ! விஷயத்துக்கு வா ! நான் நேற்று காலை வேலை விஷயமாக கீழ்பாக்கம் செல்வதற்கு பரங்கிமலை ஸ்டேஸன் படிக்கட்டில் ஏறிக்கொண்டு இருந்தேன்.

அப்போது என்னைப் பார்த்த அஸ்வின் எப்படி இருக்க என்று விசாரித்தான். ரொம்ப வருடங்களுக்கு அப்புறம் நம்மோட படித்த தோழமைக்காக விசாரிக்கும் போது உன்னப்பற்றி பேச்சு வந்தது.

உடனே அவன் சொன்ன ஒரு வார்த்தை ” அவனைப் பற்றி என்னிடம் பேசாதே ”

அதற்காகத்தான் அப்படி என்ன சொன்ன ? அப்படி

என்ன நடந்தது என்று கேட்டேன் .

அதற்குள் ஆமா , சூமா பண்ணி விட்டான்! அஸ்வின். மேலும் ‘சென்ரல்’ செல்வதாக வருத்தப்பட்டு விலகினான் .

அப்படி இல்லேடா ? நீ வந்தே. இப்போ ஆற, அமற பேசினோம். நல்ல நினைவுகளை பகிர்ந்தோம்.

அந்தப் பய அப்படியா? ஒரே திமிர், நம்பிக்கை துரோகம் | பழைச எண்ணிப்பார்க்காத ஒரு பண்ணாடை.

சேரி .நான் கிளம்புகிறேன்.

வெளியேறிய சுரேஷ் ஒரு செய்தியை உடனே அஸ்வினுக்கு அனுப்பினான்.

“நான் குமாரை சந்தித்தேன். நல்ல உபசரிப்பு, பழைய ஞாபகங்கள், பள்ளி அனுபவங்கள், குடும்ப விஷயங்கள் என ஒருநாள் போனதே தெரியவில்லை”.

இன்று விடைப்பெற்று என் ஊர் கும்பகோணம் கிளம்புகிறேன். மீண்டும் சந்திப்போம்.

தெரிவதை விட, தெரியாமல் பல விஷயங்கள் இருப்பது நல்லது என்று எனக்கு தோணுகிறது.

முடிந்தவரை நட்டை பாராட்டு; இல்லையெனில் விட்டு விலகு.

இப்படியாக whatsapp பண்ண உடனே அவனுக்கு Video Call வந்தது. அப்பா, ஆண்டான் அடிமை, இப்போது நீ எங்கே இருப்பே என்று எனக்கு தெரியாது. இப்போது சொல்றேன். கேள்! அவனுடன் சேராதே; அவன் ஒரு பணப் பிடுங்கி. எப்போ, எங்கே என்று பார்க்காமல் பழைய நண்பர்கள் பலரிடம் பணம் வாங்கி திரும்ப கொடுக்காமல் மோசடியில் ஈடுபட்டு வருகிறான்.

அவனை நம்பி ஏமாராதே? எனக்கு படிப்படியா ஒரு லட்சம் வரை கொடுக்க வேண்டும்.

நல்ல வேளை நான் இப்போது என் வீட்டிற்கு செல்ல ரயில் ஏறிவிட்டேன்.

மீண்டும் கால் வந்தது.”நான் குமார் பேசுகிறேன். செய்தி வந்து இருக்கும். இப்படித்தான் ஒரு லட்சம்

கொடுக்க வேண்டும் இரண்டு லட்சம் கொடுக்க வேண்டும் என்று அனுப்பி இருப்பான்.

நம்பாதே! உண்மை என்ன வென்றால்;’ என்னைப் பற்றி நண்பர்களிடம் அவதூறு பரப்பி அதை பெரிய விஷயமாக்கி எனக்கு அவப்பெயர் வாங்கிக் கொடுக்க வேண்டும் என்பதுதான் அவன் எண்ணம்.

ஏன் அப்படி செய்கிறான் என்று விசாரித்தபோது கிடைத்த தகவல்.

அஸ்வின் தன் காதல் மனைவி கல்லூரி நாட்களில் குமாரிடம் பழகியதும் அதை Social Media வில் பகிர்ந்ததும் இப்போது நண்பர்கள் மத்தியில் Viral ஆகி வருகிறது.

அவன் ஒரு psycho ஆக மாறிவிட்டான் என்று இவன் சொல்ல , அவனைப் பற்றி இவன் ஒரு பணபித்தலாட்டம் செய்பவன் என்று விமிர்சிக்க எனக்கு ஏண்டா இவர்கள் இரண்டு பேரையும் சந்தித்தோம் என்று ஆகிவிட்டது.

என்ன செய்ய. வாழ்க்கை பல வினோதங்களை நமக்கு புகட்டிக்கொண்டு இருக்கிறது.

உண்மை ,பொய்களை ஆராய எவருக்கும் உரிமை இல்லை.

# வாங்க "டீ" சாப்பிடலாம்

‘டீ ‘ சாப்பிடும் போது ஏற்படும் ஒரு சில சாகசங்களை இங்கே பகிர்ந்து கொள்கிறேன்.

“டீ ” என்பது ஒரு ‘குடிநீர்’ என்பதைத் தாண்டி , அது ஒரு

ஊக்க சத்தியாக,

உந்து சக்தியாக,

சிந்தனைப் பெருக்காக,

சிறகடிக்கும் எண்ணங்களை சீர் செய்யும் ஒரு யாகமாக,

சமூக உரையாடல்களின் ஒரு அங்கமாக,

மேலும் சொல்லப் போனால் ஏழைகளின் பங்காளியாக ,

ஒரு விருந்துக்கு ஒப்பான ஒரு மனநிறைவை ஏற்படுத்தித் தரும் ஆன்ம பலமாக ....( அறிமுகம் ஏற்பட்டு ஒரு சில நொடிப் பொழுதில் நாம் அழைப்பது – வாங்க’ டீ ‘ சாப்பிட்டுக் கொண்டே பேசலாம். ஆக இங்கே பணம் பெரிது இல்லை ; பெரிதினும் பெரிது அகம் !!.)

நம்மிடையே குடி கொண்டு இருக்கும் இந்த ‘டீ ‘ அதிக செலவு இல்லாமல், நம்மை பலரிடம் அறிமுகம் செய்கிறது.

இந்த ‘உலவியலை’ ஆராய்ச்சி செய்பவரிடம் விட்டு விடுகிறேன்.

-என்னுடைய வாதம் ; ஏழை ,பணக்காரன் பேதம் இன்றி ஒரு சில நேரங்கள் நம்மை இணைக்கின்றன. (உதாரணமாக ரயில் பயணங்கள்)

இதை தமிழில் “தேனீர் ” என்று சொல்கிறோம்.

மீண்டும் – தேனீர் பற்றிய உண்மை தரவுகள் எழுத்து அறிவித்த இறைவனுக்கே சாத்தியம்.

ஆம் ! தேனும் , (ஆம் Tea Cation தேன் மாதிரி இருப்பதனால் ) பாலும் ஒரு சேரக் கலந்து அதில் சிறிது சர்க்கரை இட்டு நன்றாக ஆற்றி , இலஞ்சூட்டுடன் பருகும் போது ஏற்படும் ஒரு “தனிமை” ; முதல் தன்னை மறந்து பிறரிடம் உளாவும் போது ஏற்படும் ” அலப்பறை” வரை நம்மை கொண்டு செல்லும் சக்தி இந்த “தேனீருக்கு” உண்டு.

பல ரகசியங்கள் ‘டீ’ கடையில் உடைக்கப் படலாம்.

eg: வங்கியில் கிளை மேலாளரின் நடவடிக்கைகள் மற்றும் செயல்பாடுகள் பற்றிய புரிதல் “off -the record ” – வங்கி ஊழியர்களின் உரையாடல்கள் , மாலைப் பொழுதில் தேனீர் – கடைகளில் நடக்கும்.

ஆகவே நமக்கு முதலில் தோழனாய், சகோதரனாய், நண்பனானாய், உற்ற உறவினனாய் , ஏன் எதிரியை கூட சமாளிக்கும் உத்தியினை கற்றுக் கொடுக்க வள்ள திறன் வாய்ந்தது அந்த ” டீ” என்றால் மிகையாகாது. அந்த சமாளிக்கும் திறன் என்ற கற்பனை “டீ”யினால் தான் எனக்கு வந்தது. “டி” என் வந்தனம்.

ஆகவே ! ஒன்று மட்டும் உறுதியாய் சொல்வேன்.

நீங்கள் செலவு செய்ய வேண்டாம்.

ஏதாவது சந்தர்பத்தில், உங்களுக்கு வேலை செய்த பணியாளர்களிடம் சேர்ந்து “டீ” அறுந்துப் பாருங்கள்.

நாமும்” பாரதி “ஆகலாம். முதலில் “டீ” இருந்து தொடங்குவோம்.

ஜப்பானியர்கள் ” டீயை ” சொட்டு சொட்டாக அறுந்துவார்கள் என்றும், அது அவர்களின் கலாச்சார ,பண்பாட்டு குறியீடு என்றும் படித்து இருக்கிறேன்.

சரி, நம்ப விஷயத்துக்கு வருவோம்:

ஒரு பஸ் பிரயாணம் அல்லது ரயில் பிரயாணம் நாம் ஒரு 5 அல்லது 6 மணி நேர அலவலாவிய பிறகு பிரியும் நேரத்தில் “நம் சுயபுராணத்தையும் அவரது பெரிய புராணத்தையும்” மீண்டும் அசை போட்டு புதுப்பிக்க வல்ல வல்லமை” டீக்கு” உண்டு என்பதை அறிவேன்.

“டீக்கடை” என்றால் ‘ நாயர் ‘ கடை என்ற நிலைமை

மாறி இன்று – ‘எல்லோரும் ஓர் குலம் ; எல்லோரும் ஒரு இனம்’ – என்று பாகுபாடு தெரியாமல் நம்மை இணைக்கும் ஒரு இனிய நாதமாய் எந்த பிரச்சாரமும் இன்றி மத நல் இலக்கணத்தை தெரு கோடி மக்களும் ஒன்று சேர்ந்து இசைக்கிறார்கள்.

அதனால்தான் என்னவோ “தலைவர்கள் டீ அருந்தும் புகைப்படம்” அதிக அளவில் Troll ஆகிறது.

“மீளும் ” நம் Tea Time.

ஒரு அசாதாரண கேள்வி.

நேர்காணல் செய்பவர் வேட்பாளருக்கு ஒரு கப் காபி ஆர்டர் செய்தார், வந்ததும், அது அவருக்கு முன்னால் வைக்கப்பட்டது, பின்னர் அவரிடம் கேட்கப்பட்டது: _உங்களுக்கு முன்னால் என்ன இருக்கிறது?_

வேட்பாளர்: உடனடியாக TEA பதிலளித்தார். அவர் தேர்ந்தெடுக்கப்பட்டார். அவர் ஏன் TEA என்றார் தெரியுமா ?
அது காபி என்று அவருக்கு தெரியும்?

கேள்வி: _”உங்களுக்கு முன்னால் என்ன இருக்கிறது”?
_

(U எழுத்துக்கள்) பதில் TEA (T alphabet)
U என்ற எழுத்துக்கு முன் T என்ற எழுத்துக்கள் வருவதால்.

# இன்று இரவு

இரவுகள் என்றும் கனவுகள்.

கனவுகள் நம் கண்ணை மறைக்கலாம்; ஆனால் காலத்தை வெல்லக்கூடியது.

யார் சொன்னது “காலத்தை கடக்க முடியாது என்று “?

நம் தாத்தா , பாட்டி சொன்ன ; சொல்லிக்கேட்ட கதைகள் -ஏராளம் ,ஏராளம்.

இந்த கதைகளை காலத்தின் எல்லையை வைத்து நிர்ணயிக்க முடியாது.

நான் ஒரு நாள் என்பாட்டியிடம் கேட்டேன்.

கடவுள் யார்?

கண்ணை மூடிப்பார் கடவுள் தெரிவார்!!!

கண்ணை மூடினேன், தெரியவில்லை என்றேன்.
திரும்பவும் செய்யச் சொன்னாள் என் அம்மாச்சி!!!

நான் ‘கவிஞர் இல்லை’ கடவுளை காண என்றேன்;

தொடர்ந்தது என் இமைகள்;

கடந்தது என் கற்பனைகள்.

-இப்போது ஒரு வினவல்;

எப்படி அறிவது ?

பாட்டி- ‘எனக்கான வைத்தியத்தை கொடுத்தாள்’.

தெரிதலில் தெளிதல் பெற
அறிவதில் ஆர்வம் வேண்டும்.

இந்த அறிதல் தொடர்ந்தால் “கவிஞரே கடவுள் என்றாள்”.

என் “அநுபூதி ” சொன்னது.

நீ படைக்கப்பட்டு இருக்கிறாய்.
உன் எழுதலும், வீழ்தலும் உன் சக படைப்பின் உழைப்பினால் அன்றி வேறு எதுவும் இல்லை.

எனவே தான் என்ற தன்னை மறந்து தமது என்ற

ஏற்றுமை ஓங்க உணர்வு கொள்.

மனித உணர்வே ஆத்ம உணர்வு; ஆன்மீக உணர்வு.

அன்பை அறவணை ;ஆற்றல் பெறுகும்.

உன் கடமை சித்தமாகும்.

கடவுளுக்கு நன்றிகள்.

# கடவுளின் கடமை எளிதாகிறது !!

கடவுளும் அவருடைய பரிபூரண உலகமும்.

அவருடைய (utopian world) உலகத்தில் எல்லாம் நேர்மறையாகப் படைக்கப்பட்டன.

பஞ்ச பூதங்கள்.

நீர்: அது சார்ந்து நிலம், வயல், வீடு, விலங்கு, வாழ்க்கை.

நெருப்பு: அது சார்ந்து உணவு, உடைகள்.

காற்று: மரங்கள், பழங்கள், பண்பாடு, கலாச்சாரம்.

ஆகாயம்: விண்வெளி,கண்டங்கள்.

பூமி: வாழ்விடம் .

இப்படியாக படைத்து அதில் உயிர்களை நடமாடச் சொல்லி அவன் வேடிக்கை பார்க்கிறான்.

மனிதன் வளர்ச்சி அடைந்ததை நினைத்து “அவனுக்கு” ஒரு பெறுமிதம்.

எல்லாம் கைக்கு எட்டும் தூரத்தில் இருந்து கைக்கு வந்தாகி விட்டது. ஆனால் மனிதன் “தனக்கு ” -அடிமை ஆகாமல்; தன் கைக்கு அடிையாகி விட்டானே என்று.

அவன் அவனாக இருக்க முடியாது என்று ஆகி விட்டது. இனி என் கடமை மற்ற பிற உயிர்களை காப்பது.

இதற்கு ஒரே வழி போர்.

அரசாணை பிறப்பிக்கப் படுகிறது.

எல்லோரும் 24 மணி நேரமும் தன் “கைபேசியுடன் ” இருங்கள்.

உங்களை நாங்கள் பராமரிக்கிறேnம்.

உங்கள் வாழ்வும் வளமும் எங்கள் கையில் – உலக சுகாதார மையம்.

இன்று இந்தியாவில் 10 பேர் BF.8 என்ற virus சுமந்து

இருக்கிறார்கள்.அவர்கள் இருப்பிடம் மற்றும் அவர்களிடம் தொடர்பில் இருந்தவர்கள்.

இந்த செய்த கடவுளுக்கு செல்கிறது.

அது சரி , இன்னேறு செய்தி "உக் ரைன்" நாட்டில் இருந்து.

அவர்கள் கைப்பேசியில் "இருத்தல்" பற்றி சுயபுத்தி இல்லாமல் இருந்ததால் பலி எண்ணிக்கை பல மடங்கு உயர்ந்து விட்டது.

எனவே என் வேலை என்று எதுவும் இல்லை.

மனிதன் அழிய மானுடமே காரணமாகி விடும்.

"நம்மை' யாரும் பழி சொல்ல மாட்டார்கள்.

ஆனால் மற்ற பிற உயிர்களை காக்க வேண்டுமே.

கவலை கடவுளையும் கடக்கத் தொடங்கியது.

ரா.செ

பின்னோட்டம்: dostoysky ன் existentialism பற்றிய புரிதல் மானுடத்தை மேம்படுத்தியது.

அவர் இறந்து 200 ஆண்டுகளுக்குள் இப்படி "இறுத்தலியலை " கருத்தியல் கேள்விக்கு உள்ளாக்கி விட்டதே!!!

உன்னைச் சொல்லிக் குற்றமில்லை,

என்னைச் சொல்லிக் குற்றமில்லை,

காலம் செய்த கோலமடி,

கடவுள் செய்த குற்றமடி – என்று

சொல்ல "கண்ணதாசனுக்கு" மட்டும்தான் உரிமை உண்டு.

# ராஜீவும் அவன் பேராசையும்

நான் கிருஷ்ணன் பேசுகிறேன்.ஸ்டேட் பேங் ஆப் இந்தியாவில் 35 வருடம் பணிபுரிந்து மேலாளராக ஓய்வு பெற்று மாதம் அரை லட்சத்திற்கும் அதிகமாக ஓய்வூதிய நிதி பெற்று வாழ்க்கையை நிறைவாக வாழ்ந்து கொண்டு இருக்கிறேன்.என் மனைவி மேட்டுப்பாளையம் அருகே உள்ள ஒரு பள்ளியில் தலைமை ஆசிரியராக இருக்கிறார். 10 மாதத்தில் ஓய்வு பெற உள்ளார்.

ஆகவே எங்களுக்கு எந்த ஒரு பணப் பிரச்சனையோ , உடல் உபாதையோ இல்லாமல் நல்லபடியாக சந்தோஷமாக வாழ்ந்து கொண்டு இருக்கிறோம்.

மேலும் கடவுள் எங்களுக்கு ஒரு ஆண் மகனை கொடுத்து உள்ளார். அவன் இந்த வருடம் +2 வகுப்பில் தேறி உள்ளான்.

ஆனால் அதுவே எங்களுக்கு ஒரு தர்மசங்கடத்தை கொடுத்துவிட்டதாக நினைக்கிறோம். காரணம் அவனுடைய மொத்த விழுக்காடு 50% மட்டுமே !

ஆகவே நான் என் மகனை வெகு தொலைவில் டார்ஜிலிங் கோடை வாசல் தளத்தில் அமைந்து உள்ள பொறியியல் படிப்பிற்கு அனுமதி பெற்று சேர்த்து விட்டேன்.

ஆனால் அவனுக்கு அதில் விருப்பம் இருப்பதாக தெரியவில்லை; ஆனால் அதை எங்களிடம் காட்டிக் கொள்ளவும் இல்லை; எனவே எல்லாம் நன்றாக நடப்பதாகவே நினைத்தோம்.

காலங்கள் கடந்தது. மகன் இறுதியாண்டை முடிக்கும் தருவாயில் இருந்தான்.

என்னுடைய மைத்துனர் மேற்கு வங்காள அரசின் ,

முதன்மை செயலாளராக பணிபுரிந்தார். அவரே எங்கள் மகனுக்கு பாதுகாவளர் மற்றும் ஆலோசகர் என்று சொன்னால் அது மிகை இல்லை.

ஆனால் கடந்துவந்த 3 1/2 வருட காலத்தில் எனக்கும் என்னுடைய மனைவிக்கும் இடையே பல சண்டைகள், சச்சரவுகள் இருக்கத்தான் செய்தது.

“நாம் சமுதாய பயந்தாங்கொள்ளிகள் ”
என்பது அவளுடைய குற்றச்சாட்டு. உண்மை சற்று சுடவே செய்தது. நான் அதைப் பற்றி கவலைப் படாமல் என் மனைவியை எதிர் கொண்டேன்.

“ஷீலா , இதோ பார்; கல்வி மட்டும் தான் முக்கியம்; சமுதாயம் ‘நம்மை’ மதிக்க கல்வி ஒரு அளவு கோல். – அதுவே முதன்மையான ஒன்று” என்று சொல்லிச் சமாளித்தேன்.

எப்படியோ , எங்களை சமாதானப்படுத்த -ராஜீ ; எங்கள் மகன் வருடத்திற்கு இரண்டு முறை வந்து போவான்.

வாழ்கையில் எந்த உரசலும் இல்லை; சலிப்பும் இல்லை; ஆனால் அர்த்தம் வேண்டும். அதுவும் கிடைத்தது என்று தான் சொல்லவேண்டும்.

“அவனுடைய கிரேட் முதல் வருடத்தில் B ஆக இருந்தது. படிப்படியாக உயர்ந்து இப்போது A+ ஆக வளர்ச்சி அடைந்தது .
எங்களுக்கு பெருமிதத்தை தந்தது என்றால் அது உண்மைதான்.

இதை கொண்டாடும் பொருட்டு நாங்கள் இருவரும் எங்கள் மகன், மற்றும் மைத்துனர் ஆகிய இருவருக்கும் ஒரு விசித்திர அதிர்ச்சியை ஏற்படுத்த யாருக்கும் சொல்லாமல் “டார்ஜிலிங்” புறப்பட்டோம்.

கல்கத்தாவில் இறங்கி ஞாயிறு இரவு தங்கினோம். எங்களுக்கு திங்கள் கிழமை ‘3’ மணி அளவில் டிரெயின் என்பதால் காலை முதல் மதியம் வரை ‘சாப்பிங் ‘செய்து இருவரும் கலைப்பாற மதிய உணவை ருசிக்க தொடங்கினோம்.

வங்க மொழியில் நீயூஸ் ஓடிக் கொண்டு இருந்தது. நடுவிலே TVல் பிரேக்கிங் நீயூஸ் ஒன்று வந்து ஓடியது.

அந்த நீயூஸ் எங்களை திசை திருப்பியது. நிலை குழைய செய்தது, தடுமாறினோம், தத்தளித்தோம், அழுதோம், ஆனந்தத்தில் நினைந்தோம்.

ஒருவரை ஒருவர் பார்த்து பரவசம் அடைந்து கண்கள் குளமாவதைக் கண்டு யாரும் எங்களை சமாதானம் படுத்த வில்லை.

இதோ எங்கள் மகன் பேசுகிறான் – கேளுங்கள்.

ஆங்கிலம் தமிழ் ஆக்கப்படுகிறது.

“எல்லோருக்கும் வணக்கம். நான் ராஜூ – ராஜூ செல்வம். நான் தமிழன் . நான் இதழியல் 4 ஆண்டு படித்து வருகிறேன்.

நான் உண்மையில் கொடுத்து வைத்தவன்.கொடுத்தவர்கள் என் ஆசிரியர்கள் .

அவர்களுக்கு முதலில் நன்றி சொல்ல கடமையை பட்டு இருக்கிறேன்.

இரண்டாவது என் மாமா.

இந்த வருடத்திற்கான Yuva purashkar Award எனக்கு கிடைத்து இருப்பதில் எனக்கு அளவிலா மகிழ்ச்சி.

கோண்டுகளின் பழங்குடி வாழ்வு பற்றிய எனது ஆராய்ச்சிக்காக இந்த மதிப்புமிக்க விருதை வழங்கியதற்காக சாகித்ய அகாடமிக்கு நன்றி.

ஆந்திரா, தெலுங்கானா, ஒடிசா, மத்தியப்பிரதேசம் மற்றும் ஜார்க்கண்டின் சில பகுதிகள் வரையிலான பரந்த நிலப்பரப்பில் கோண்டுகள் வாழ்கின்றனர்.

அவர்கள் இணைந்து வாழ்வது காடுகள் மற்றும் இந்த பகுதிகளில் அவர்களின் உணர்வுபூர்வமான இருப்பு உண்மையில் சுற்றுச்சூழல் அமைப்புக்கு அதிக அளவில் பயனளிக்கிறது மற்றும் மிகவும் அரிதான விலங்குகள் மற்றும் தாவரங்கள் அவற்றின் காரணமாக உயிர்வாழ்கின்றன.

அவர்கள் தங்கள் வாழ்க்கையின் மூலம் நமக்கு ஒரு பாடம் கற்பிக்கிறார்கள், மேலும் அவர்களால்

நடைமுறைப்படுத்தப்பட்ட இயற்கையுடன் ஒத்திசைந்து நம் நடத்தையை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

எனது மாமாவும் கல்லூரியின் முதல்வரும் எனது ஆர்வத்தை சரியான ஆர்வத்துடன் எடுத்து, எனது ஆய்வறிக்கையை சுதந்திரமாக அனுமதித்தனர், எனவே நான் அதை வழங்கினேன்.

அவர்களுக்கு முதன்மையான எனது வணக்கங்கள்.

எழுதுவதில் என் ஆர்வம் இருப்பதால், என் பெற்றோர் என்னை மன்னிக்கலாம்.

மீண்டும் ஒருமுறை நன்றி.

முடிவு.

i thank sahitya akademi for conferring this prestigious award for my research on Tribal Lives of Gonds .

Gonds inhabit vast swath of lands ranging from Andra, telengana, odhisa, madhyapradesh and parts of jharkhand as well

They cohabitation is forests and their conscious presence in these areas really benefit the eco system to a greater extent and very rare species of animals and plants are surviving because of them.

They teach us a lesson by their life and we should cultivate our behaviour in sync with nature as practised by them.

Thanks once again for the greatest movements in life.

May my parents forgive me for cheating them right,Left and centre . My uncle and my principal of the college took my interest in right earnest and allowed my thesis a free hand and therefore I presented it .

My regards to them foremost.

My parents might forgive me for not being their prodigy as my passion is WRITING .

THANKS once again .

End.

# "மூன்றாம்பிறை- முருகேஷ்" ஒரு நேர்காணல்

நேயர்களுக்கு வணக்கம். 'வெப் தமிழா' "யூ டியூப்" சேனனுக்கு உங்களை அன்புடன் வரவேற்கிறோம்.

இன்று நாம் சந்திக்க விருக்கும் "வெப் தமிழாவின் " – உங்கள் ஊர் நாயகன் " திரு மூன்றாம் பிறை – முருகேஷ்.

"சார் , உங்க பேச்சு இன்னிக்கு ரொம்ப அட்டகாசம். வெளுத்து வாங்கிவீட்டீர்கள். உங்களுடைய பேச்சைக்கேட்டு மக்கள் எழுந்து நின்று ஆரவாரம் செய்தார்கள்.என்ன கைதட்டல்கள்.

உங்கள் வாதம் நேர்த்தியாகவும் , அழகாகவும், ஏற்ற , இறக்கத்துடன் இருந்ததால் மக்கள் சிரித்து மகிழ்ந்தனர். அவர்களை சிந்திக்க முடியாத அளவிற்கு உங்களுடைய தரவுகளை எங்கிருந்து எடுத்தீர்கள்" – நான் 'பப்ளிக்' கா இருந்து பார்த்ததால் சொல்கிறேன் .

உங்களுக்கு தெரியும் என் பெயர் – 'தடால் அடி 'முருகேஷ். ஏன் என்னை தடால் அடி என்று அழைத்தார்கள் என்றால் ; முருகேஷ் என்றால் "ஆக்சன்".

எந்த ஒரு காரியத்தையும் வெட்டு ஒன்று ,துண்டு இரண்டு என்று பார்ப்பவன்.

இதன் மூலம் " பப்ளிக்" ல் நல்ல பாப்புலர் ஆனேன். தலைவர் கேட்டுக் கொண்டதின் பேரில் பெயரை சிறிது மாற்றி உள்ளேன்.

சார். நீங்க "மக்கள் சிந்தனை கட்சி" சார்பாக போட்டி இடுகிறீர்கள். வாழ்த்துக்கள்.

உங்களுடைய மாற்றம் தடால் அடி To முன்றாம் பிறை – கொஞ்சம் நேயர்களுக்காக.....

ok. என்னைப் பற்றி மக்களிடம் நல்ல மதிப்பும் , ஆதரவும் , செல்வாக்கும் இருப்பதைப் பார்த்து எதிர்கட்சிகள் அவதூறுகளை பரப்பிவருன்றனர். அதைப் பற்றி நான் கவலைப் படப் போவது இல்லை.

என்னுடைய கவலை என் தொகுதி மக்களின் குறைகளை கலைவதே...

ஒரு ஒரு உதாரணம்: கோயில், மசுதி, சர்ச் ஆகிய திருத்தலங்களுக்கு சொந்தமான இடங்களில் உள்ள வியாபாரிகள் தங்கள் மாத வாடகை பாக்கியை சரியாக கட்டத் தவறினால் நான் சென்று அதை தீர்த்து வைப்பேன்.

இதன் மூலம் எனக்கு மதம் சார்பற்ற ஒரு முகம் பொது வெளியில் உண்டு.

ஆகவே என் பெயரை மூன்றாம் பிறை என்று மாற்றிக் கொண்டேன்.

நன்றி.

சட்டம் , ஒழுங்கு இதை கையில் எடுப்பது முறையா ?

சட்டம் ஒழுங்கு எல்லாம் எனக்கு தெரியாது. எனக்கு தெரிந்தது எல்லாம் ஊருக்கு ஏதாவது நன்மை செய்யனும். மற்றவற்றை என் தலைவரிடம் கேட்டுக்கொள்ளுங்கள்.

தோழர்கள் படை சூழ – ‘மூன்றாம் பிறை’ ஒளிக்கிற்றாக பறந்து மறைந்து சென்றது.

நண்பர்களே ! இந்த பேட்டி உங்களுக்கு பிடித்து இருக்கும் என்று நம்புகிறோம்.
நீங்கள் போகும் முன் எங்கள் web Thamila வை Subscribe செய்யவும்.

அப்படியே அங்கே உள்ள Bell Icon யை சொடுக்கவும்.

உன்னைச் சொல்லிக் குற்றமில்லை; என்னைச் சொல்லிக் குற்றமில்லை;
இது காலம் செய்த குற்ற மடி,
கடவுள் செய்த குற்ற மடி.

இங்கே எல்லாம் வியாபாரம்.

# முடிவுரை

கிரேக்கம் உலகிற்கு தந்தது விஞ்ஞானம்;
தமிழ் உலகிற்கு தந்தது மெய்ஞானம் ;
தமிழன் தன்னை குடிகளாக அறிந்தான்,
தான் வாழும் நிலங்களை திணைகளாக ஆக்கினான்;
வாழ வழிசெய்தான், வாழும் கலை அறிந்தான்,
வென்று பலகண்டங் களை கண்டான்,
தடம் பதித்தான்; தாண்டவம் ஆடவில்லை,
மனிதம் வளர்ந்தது ; புனிதம் என்பது,
பூமியில் பிறக்கும் எல்லா உயிர்க்கும்,
ஒன்றே ஆனது .ஆகவே சொன்னான் –
ஒன்றே குலம் ;ஒருவனே தேவன்.
இலக்கணம் கண்டான், இலக்கியம் வகுத்தான்,
ஆகவே சொல்கிறேன் தமிழன் தன் பிறப்பால்,
மொழியால் , இனத்தால், திணையால் ;
யாதும் ஊரே !! யாவரும் கேளீர் !!!
பெயர் = செல்வராஜ் ராமன்

கல்லால் கலை கண்டான் கரிகாலன்,
கல்லணை கட்டினான்; காலத்தை வென்றான் !
அவன் இன்றி அமையாது உலகு !
ஆமாம்!! அவ்வாறே உறுவானது நதிக்கரை நாகரீகம் ;

பயிரிட ஆரம்பித்து கொண்டும். கொடுத்தும் அருமையாக,
வளர்ந்தது தமிழர்தம் மருத சமூகம்.

32 வகையான அறங்கள் செய்-
சொன்னது திருவிளையாடல் புராணம்;

பார்வதி தேவி அவ்வாறே மருதநில மக்களை தேர்வு செய்தாள்.

பெருமை விளங்கியது, நேர்மையும் உழைப்பும் பண்பாக மாறின.

அதுவே தமிழன் அடையாளம் !!

அவன் தன் வாழ்வு !!!!

# இந்த கையேடு

படிப்பு என்பது ஒரு கருவி...
கருவி நம்மை சீர்படுத்த வேண்டும்,
உழைப்பு என்பது
1. உடல்,
2. உள்ளம்,
3. உணர்வு,
ஆகியவற்றை தன்னகத்தே கொண்டு இயங்க வேண்டும்.
அங்ஙனம் மனிதம் பிறக்கும்.